# உள்ளடக்கம்

# மனம் என்னும் மாயம்

மனயென்பதென்ன? அது எங்கே இருக்கிறது? கை, கால், கண், இருதயம் என்றால் உடம்பில் உள்ள உறுப்புகள் என்று உடனே தெரிகிறது. அவைகளுக்கு வடிவம் உண்டு. பருமன் உண்டு. ஆதலால் அவைகளை எளிதில் அறிந்து கொள்ள முடிகிறது. ஆனால் மனம் என்பது என்ன? அதற்கு வடிவம் உண்டா? பருமன் உண்டா? தொட்டு பார்த்து அறிந்து கொள்ளமுடியுமா? இவ்வாறு எண்ணி பார்த்தால் ஒன்றும் விளங்குவதில்லை. இவ்வாறு யோசனை செய்வதற்கு அந்த மனமே காரணமாக இருக்கிறதென்று தோன்றுகிறது. ஆனால் அது என்ன என்று மட்டும் சுலபமாக அறிந்து கொள்ள முடிவதில்லை. மனதிற்கு உருவமில்லை. கன பரிணாமமும் இல்லை. மனம் என்பது தசை, நரம்பு முதலியவைகளால் ஆக்கப்பட்டதல்ல. அது ஸ்தூல வஸ்துவும் அல்ல. அது சூட்சம பொருள். ஸ்தூலப் பொருள் என்றால் அது உடம்பைச் சேர்ந்த ஓர் உறுப்பாகிவிடும். எளிதாக அதை அறிந்து கொள்ளவும் முடியும்.

சிலர் மூளைதான் மனம் என்று தவறாக கருதுகிறார்கள். மூளை என்பது உடம்போடு சேர்ந்த ஒரு பருப்பொருளான உறுப்பு. அது மனமல்ல. சூட்சம பொருளாக மனம் இருக்கிறதென்று மட்டும் நமக்குபுலனாகிறது. அந்த மனம் தான் ஆசைகள், எண்ணங்கள், நோக்கங்கள், நம்பிக்கைகள் முதலியவற்றிற்கு இடமாகிறது என்று இப்போது தெரிகிறது. அந்த மனதிற்கும் உடம்பிற்கும் நெருங்கிய தொடர்பிருக்கின்றது என்று தெரிகிறது. மனம் உடம்பை பாதிக்கிறது. உடம்பு மனதை பாதிக்கிறது. பயம் ஏற்படும் போது கண்ணீர் வருகிறது. பயம், கோபம், துக்கம் முதலிய உணர்ச்சிகள் மனதில் உண்டாகின்றன. அவற்றால் உடல் பாதிக்கப்படுவதை நாம் அறிகிறோம். குடி வெறியனுடைய கண்ணிலே மாட்டிற்க்கு நான்கு கொம்புகள் இருப்பதாகத் தோன்றுகிறது. இரவிலே வயிறு புடைக்கத் தின்றவனுக்குப் பலவிதமான கனவுகள் தோன்றுகின்றன. இவைகளை காணும்போது உடலை மனமும் மனதை உடலும் பாதிப்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

இப்போது நமக்கு சில சந்தேகங்கள் வரக்கூடும். சூட்சுமான ஒரு பொருள் இயல் அல்லது ஸ்தூல உடலை எப்படி பாதிக்க முடியும் என்ற

கேள்வி பிறக்கலாம். கோடரியை ஓங்கி அடித்தால் மரம் எப்படி வெட்டப்படுகிறதோ அது போல் ஒரு இயல் உடல் மற்றொரு இயல் உடலை பாதிக்கிறது. இதை புரிந்து கொள்ளுதலும் மிக எளிது. ஆனால் மனம் எப்படி உடலை பாதிக்கிறது என்பது தான் எளிதில் புரிவதில்லை.

மனதை அறிந்து கொள்ள இரண்டு வழிகள் சொல்லப்படுகின்றன, ஒன்று சிந்தனை செய்து பார்த்தல். இரண்டாவதாக அனைத்தையும் கவனித்தல். நடத்தையைப் பிரதானமாகக் கொண்டு மனதைப் பற்றி அறிந்து கொள்ள சிலர் இருக்கின்றனர். அவர்களை நடத்தை விதியாளர் (Behaviourists) என்று அழைக்கப்படுகின்றனர். அவர்கள் மேலே கூறிய முதல் வழியைத் தவறானதென்று கண்டிக்கின்றார்கள்.

மனம் தான் சித்தனை செய்ய உதவுகிறது என்று சொல்லுகிறோம். அப்படி இருக்க அதைக் வைத்து கொண்டே எப்படி அதை பற்றி சிந்திப்பது? மனதைப் பற்றிய விதிகளை அறிய மனதை ஒரு கருவியாக உபயோகிக்கும் போது பல தவறுகள் உண்டாகின்றன. யார் எதைக் கொண்டு மனதை சோதிக்கிறார்களோ அது தான் அவர்களுக்கு விடையாக தோன்றுகிறது. உதாரணமாக ஒரு தெருவில் ஒரு செருப்பு தைக்கும் தொழிலாளி வேலை செய்து கொண்டு இருக்கிறான். அந்த தெருவிலே செல்லுபவர்களின் செருப்பில் ஏதேனும் பழுது இருந்தால் அது தான் அவன் கண்ணில் படுகிறது. அவனிடம் இருக்கும் கருவிகளை கொண்டு அவனால் முடிந்த வரை மற்றும் அவனுக்கு தெரிந்தவரை அதை சரி செய்ய முயல்கிறான். ஆனால் அந்த செருப்பின் சொந்தகாரர்களின் முகம் அவனுக்கு அதிகம் தெரிவதுமில்லை. ஒரு ஓவியன் ஒரு காட்டின் வழியே சென்று கொண்டு இருக்கிறான் என்று வைத்து கொள்ளுங்கள். அவனுக்கு பலவிதமான வண்ணங்கள் பலவித வேற்றுமையான உருவங்களாக தெரிகிறது. அதே காட்டில் விலங்குகளை வேட்டையாட செல்லும் வேடனுக்கு அழகிய இயற்கையின் பசுமை மற்றும் இனிய காற்று இருப்பதை உணர்வதில்லை. மாறாக அவன் கண்ணில் அதிகம் படுவது கரையான் புற்றுகளும், புதர்களும் அவனுக்கு மான்கள் போலவும், வேட்டையாடும் விலங்குகள் போலவும் உணர்கிறான். இல்லாவிட்டால் அது இல்லாததை உணர்கிறான்.

ஒரு மன மருத்துவர் பாடம் சொல்லி கொடுத்துக்கொண்டு இருந்தார். அவருடைய வகுப்பில் இருந்த மாணவன் ஒருவன் திடீரென்று எழுந்து ஏதோ கோபமாக சொன்னான். ஒரு துப்பாக்கியை எடுத்து ஆசிரியரை

பயமுறுத்தினான். எல்லோரும் திகைத்து போனார்கள். ஆனால் அவன் அருகில் இருந்த மாணவர்கள் அவன் மீது வேகமாக பாய்ந்து அவன் கையில் இருந்த துப்பாக்கியை பிடுங்கியதுடன் அவனை வகுப்பில் இருந்து வெளியேற்றினார்கள். ஒழுங்கீனமாக நடந்து கொண்ட அந்த மாணவன் மீது வழக்கு தொடர வேண்டும் என்று அந்த மன மருத்துவர், மற்ற மாணவர்கள் அனைவரையும் தாங்கள் கண்ட சம்பவத்தை பற்றி தனித்தனியாக விவரித்து எழுதி தருமாறு கேட்டுக் கொண்டார். அப்படி அவர்கள் எழுதிக்கொடுத்தவற்றை எல்லாம் ஆராய்ந்த போது முக்கியமான செய்கைகளைப் பற்றியே மாறுபட்ட குறிப்புகள் இருந்தன. ஆனாள் அவர்கள் எழுதிய எல்லாம் ஒரே மாதிரி இருக்கவில்லை. மேலே சொன்ன ஒரு சம்பவம் ஒரு ஆராய்ச்சிக்காக மட்டுமே உருவாக்கப்பட்டது. அந்த சம்பவத்தில், அந்த வகுப்பில் இருந்த ஆசிரியர் மற்றும் மூன்று மாணவர்களுக்கு மட்டுமே அது ஒரு நடிப்பு உண்மை அல்ல என்பது தெரிந்திருந்தது. ஒவ்வொரு மாணவர்களின் இயல்புக்கு ஏற்ப அவர்கள் கண்ட காட்சிகளை விவரித்தார்கள். இது மனதின் வெவ்வேறு அம்சங்களை ஆராய பயன்படுத்திய சோதனையாகும்.

மேற்கண்ட ஆய்வில் இருந்து மனத்தைக் கொண்டே மனதை ஆய்வு செய்வது சரியாக அமையாது என்று விளங்குகிறது. நம் உடலில் உள்ள அங்கங்களை பற்றி அறிய மனது பயன் படலாம். அதாவது கை, கால்கள், பார்க்கும் கண், நாக்கு. ஆனால் மனம் தன்னை பற்றியே அறிந்து கொள்ள மனதை பயன்படுத்த இயலாது என்பதை இப்போது அறிகிறோம். அதனால் இந்த முறை சரியானது இல்லை என்பதை நடத்தை கொள்கையாளர்கள் ஒதுக்குகிறார்கள். மனம் எவ்வாறு வெவேறு சந்தர்பங்களில் வெவ்வேறு விதமாக நடந்து கொள்கிறது என்பதை கொண்டே மனதை அறிந்து கொள்ள வேண்டும் என்று அவர்கள் கருதுகிறார்கள். அதற்காக அவர்கள் பலவித சோதனைகளை செய்திருக்கிறார்கள். ஏதாவது ஒரு சூழ்நிலையில் இருக்கவேண்டிய நிலை வந்தால் அதற்கேற்ப நடந்து கொள்கிறது என்ற முடிவிற்கு வந்தார்கள். அந்த நிகழ்ச்சிக்கு மனது எந்த விதத்திலும் காரணம் இல்லை என்றும் அவர்களின் ஆராய்ச்சி முடிவுகள் சொல்கிறது. அவர்கள் செய்த சில சுவாரசியாமான ஆராய்ச்சி ஒன்றை இங்கு காண்போம்.

உணவை கண்டதும் வாயில் நீர் சுரப்பது சாதரணமான ஒரு செயல். ஒரு நாயின் முன் உணவை வைக்கும் போதெல்லாம் மணியோசை

கேட்கும்படி பல நாட்கள் தொடர்ந்து செய்தார்கள். உணவை கண்ட போதெல்லாம் நாயின் வாயில் நீர் சுரந்து கொண்டு இருந்தது. பின்பு ஒருநாள் உணவைக் கொண்டு வராமலேயே மணியோசையை நாய் கேட்கும்படி செய்தார்கள். அப்போது அந்த நாயின் வாயில் இருந்து நீர் சுரந்தது. உணவைக் காணும்பொழுதே நாய் அந்த மணியோசையை கேட்டு இருக்கிறது.

உணவை கண்டதாலும், மணியோசை கேட்டதாலும் ஏற்பட்ட உணர்ச்சிகள் நரம்புகளின் வழியாக மூளைக்கு செல்கிறது. அவற்றின் பயனாக அங்கிருந்து ஒரு வித உணர்ச்சியாக தோன்றி செயல் நரம்பு வழியாக வாய்க்குச் சென்று நீர் சுரக்கும் செயலை செய்கிறது. இது போல் கண் பார்வைக்கும் செவி உணர்விற்கும் ஒருவித தொடர்பு ஏற்பட்டு விடுகிறது. அதனால் மணியோசை கேட்கும் காலத்திலும் வாயில் நீர் சுரக்கிறது. இந்த நிகழ்ச்சிக்கு மனம் தேவையில்லை என்பதை கண்டுபிடித்தார்கள். ஒரு எந்திரத்தில் ஏதாவது ஒரு விசையை அழுத்தும் போது அதன் விளைவாக ஒரு குறிப்பிட்ட செயல் நடைபெறுவது போல உயிருள்ள உடலிலும் நடக்கிறது என்பது அவர்களின் கருத்து.

ஒரு குறிபிட்ட சூழ்நிலையில், ஒரு விசையை கொடுக்கப்பட்ட இயந்திரம் ஒரு செயலை செய்து விடுவது போல, எல்லா விலங்குகளும் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் ஒரு குறிப்பிட்ட நிகழ்வை நிகழ்த்துகிறது. ஒவ்வொரு சூழ்நிலையிலும் அவை நடந்து கொள்ளும் விதத்தை கண்டபின் அதை அறிந்து கொள்ளமுடியும். மனித எந்திரம் அதிக சிக்கல்களும் நுண்மையும் வாய்ந்ததாக இருப்பதால் அதன் தன்மையை எளிதாக கண்டறிய முடிவதில்லை. இது தான் மிருகங்களுக்கும் மனிதனுக்கும் உள்ள வேறுபாடு என்று அவர்கள் கருதுகிறார்கள்.

வாழ்க்கையில் பல வித விஷயங்களைப் பற்றி நாம் பலவிதங்களில் சிந்தனை செய்கிறோம். சித்தித்து செய்து முடிவிற்கு வந்த பிறகு தான் எந்த காரியம் செய்தால் நன்மை தரும் என்பதை உணர்கிறோம். மனம் என்று ஒன்று இல்லாவிட்டால் எப்படி நாம் சிந்திக்க முடியும் என்று சந்தேகம் உண்டாகலாம். அதற்கும் நடத்தை கொள்கையாளர்கள் சில காரணங்களை சொல்கிறார்கள். வார்த்தைகளின்றி சித்திப்பது என்பது ஒரு இயலாத காரியம். நாம் எப்போதும் வார்த்தைகள் மூலமாக தான் சிந்திக்கிறோம். பேசும் போது வார்த்தைகளால் தான் பேசுகிறோம். எண்ணும்போது வார்த்தைகளை நாம்

உச்சரிப்பதில்லை. இருந்தாலும் அந்த வார்த்தைகள் குரல்வளையில் இருக்கும் தசை நார்களின் நுட்பமான அசைவின் காரணமாகவே உண்டாகிறது. அதனால் எண்ணுவதெல்லாம் உச்சரிக்கப்பட்ட பேச்சுகள் தான் என்றும், அதற்கு மனம் தேவையில்லை என்றும் நடத்தை கொள்கையாளர்கள் வாதிடுகிறார்கள்.

அவர்களின் கூற்றை ஒப்புக்கொண்டு மனம் என்று ஒன்று இல்லவே இல்லை என்று ஒரு முடிவிற்கு வர எண்ணினால், அதிலும் சில சிக்கல்கள் உள்ளது. இதை பற்றி அடுத்த பகுதியில் சற்று விரிவாக காணலாம்.

# மனம் என்ற ஒன்று இருக்கிறதா? அல்லது கற்பனை கதையா?

சற்று ஆழ்ந்து பார்க்கும் போது நமக்கு மனதை பற்றிய சந்தேகங்கள் வருகிறது. மேம்போக்காக பார்க்கும் போது எளிதாக தோன்றியவை ஆழ்ந்து பார்க்கும் போது குழப்பத்தை தருகிறது. இது பலவகையான முரண்பட்ட கருத்துக்களுக்கு காரணமாகிறது. மனத்தை பற்றிய ஆராய்ச்சியிலும் இதே தொல்லை தான். மனம் என்பதே இல்லை என்று முடிவு கட்டியுள்ளனர். இவர்கள் சொல்லுவதை ஏற்றுக்கொள்ள முடியாது என்று வேறு சில அறிஞர்கள் வாதிடுகிறார்கள்.

நடத்தை கொள்கையாளர்கள் கூறுவது போல புலன்களின் வழியாக மூளைக்கு சென்ற புலன் உணர்வு சூழ்நிலைக்கு ஏற்ப செயல்களை நிகழ்த்துகிறது அந்த செயலுக்கு மனம் அவசியம் இல்லை என்று உடனடியாக முடிவுக்கு வரமுடியாதபடி பல சந்தேகங்கள் தடையாக இருக்கிறது. புலன் உணர்வானது நரம்புகளின் வழியாக மூளைக்கு செல்கிறது. புலன் உணர்வை கொண்டு செல்லும் நரம்புகளுக்கும் செயல் உணர்வை கொண்டு செல்லும் நரம்புகளுக்கும் இடையே ஒரு தொடர்பை மூளை ஒரு எந்திரம் போல செய்கிறது என்று நாம் எண்ணினால் எளிதில் மனம் இல்லை என்ற கொள்கையை ஏற்க முடிகிறது.

இதன் மூலம் எந்த செயலுக்கும் மனமே தேவையில்லை என்று தோன்றுகிறது. ஆனால் அது அவ்வுளவு எளிதல்ல. மனம் இல்லை என்ற கொள்கைக்கு மேற்கண்ட கருத்தை கொண்டு முடிவிற்கு வர இயலாது. புலன் உணர்வால் மட்டுமே ஒரு செயல் நிகழ்கிறது என்றால் புலன் உணர்விற்கு காரணமாக ஏதாவது ஒன்று இருந்தே தீர வேண்டும். எதிர்காலத்தில் தோன்ற கூடிய ஒரு விஷயம் இன்று நம் புலன் உணர்விற்கு காரணமாக இருக்க முடியாது. நம் எதிரிலே ஒரு பழம் இருந்தால் அதைப் பற்றிய உணர்வு கண்களின் வழியாக மூளைக்குச் செல்லும். மூளையின் செய்கையால் அந்த பழத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமென்ற செயல்உணர்வு கைகளுக்கு வரும். அதனால் பழத்தை எடுத்துக்கொள்ளும் செயல் நிகழும். உண்மைதான், ஆனால் பழம் நம் எதிரிலே இல்லாவிட்டால் அந்த செயல் நிகழ முடியாது.

அனைத்து உயிருள்ள பிராணிகளும் இது போல் புலன் உணர்வின் விளைவாக செயல்களை செய்வதில்லை. பின்னால் ஏற்பட இருக்கும் நிகழ்வை முன்பே எண்ணி அவைகள் செயல் படுகிறது. இனபெருக்கத்தை உதாரணமாக எடுத்துக்கொள்வோம். முட்டை இடுவதற்கு முன்பே காக்கைகள் கூடுகள் கட்ட ஆரம்பிக்கின்றன. குயில்கள் கூடு கட்டவில்லை என்றாலும் அவைகள் இடுகிற முட்டைகளை காக்கைக் கூடுகளில் தந்திரமாக வைத்துவிட்டு பறந்து விடுகிறது. இந்த மாதிரி செயல்கள் எல்லாம் புலன் உணர்வால் ஏற்படுவதில்லை. அவைகள் சிந்தனையின் விளைவாகவே ஏற்படுகிறது.

எதிர் காலத்தில் உண்டாகும் நிகழ்வை எண்ணிப்பார்த்து மனிதன் பல காரியங்களைச் செய்கின்றன. மனிதன் பல நூல்களைக் கற்றுத் தேர்ந்து பட்டம் பெற முயல்கிறான். அப்படிப் பட்டம் பெறுவதால் விளையப்போகும் நன்மைகளை முன்பே கணித்து அந்த பெரிய முயற்சியை செய்கிறான். பின்னர் வரப்போவதை முன்னாலேயே எதிர்பார்க்கும் தன்மையானது புலன் உணர்வால் ஏற்படும் செயலாகாது. அவ்வாறு எதிர்பார்க்கக் கூடிய திறமைக்கு மனமே காரணமாக இருக்க வேண்டும் என்று இப்போது புலனாகிறது.

மனமே பொய்யா?

இனிமேல் வரப்போவதை எதிர்பார்த்துக் காரியம் செய்வது போலவே இறந்த காலத்தில் நடைபெற்ற சம்பவங்களை ஞாபகத்தில் கொண்டு காரியம் செய்வதும் மனத்தின் தன்மையாகும். மனம் என்பது ஒன்றில்லாவிட்டால் ஞாபக சக்தி எவ்வாறு உண்டாகின்றது என்பதை எளிதாக விளக்க முடியாது. நடத்தை கொள்கையாளர் அதற்கும் சில விளக்கங்களை கூறுகிறார்கள். ஆனால் அதுவும் முற்றிலும் பொருத்தமானதாக தோன்றவில்லை.

திடிர்ரென்று ஒரு புலி எதிர்பட்டால் பயமென்னும் உள்ளக் அதிர்ச்சி உணர்வு உண்டாகின்றது. அந்த உள்ளக் கிளர்ச்சிக்கு எதிரே தோன்றும் புலியே காரணம். நடத்தைக் கொள்கையர் கொள்கைப்படி மனம் என்னும் ஒன்றிலே இதை புரிந்து கொள்ளலாம். ஆனால் பய உணர்ச்சிக்கு காரணமாக எதிரிலே ஒன்றுமில்லாத போதும் பல சமயங்களில் பயம் உண்டாகிறது. சிறந்த அறிவாளிகள் அடங்கிய சபையிலே அடுத்த வாரம் நீங்கள் பேச ஏற்பாடுகள் நடக்கிறது என்று வைத்து கொள்வோம். அப்போது திடிரென்று

உண்டான இந்த ஏற்பாட்டால் உங்களுக்கு பயம் வரக்கூடும். கவலையும் உண்டாகிறது. அந்த சபையிலே சிறந்த அறிவாளிகள் இல்லாமல் இளம் மாணவர்கள் மட்டும் இருக்கிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். இப்போது உங்களுக்கு அந்த பயம் தோன்றுவதில்லை. மகிழ்ச்சியே தோன்றுகிறது. பின்னால் வரப்போகும் இந்த நிலைமை இப்பொழுதே நமக்கு பயத்தையோ மகிழ்ச்சியையோ அளிக்கிறது. மனம் என்று ஒன்று இல்லாமல் இது சாத்தியமில்லை என்பதை இப்போது அறியலாம்.

மெக்டோகல் என்ற மருத்துவர் மனம் என்று உண்டு விளக்க ஆழமான ஒரு உதாரணம் தருகிறார். ஒருவருக்கு, "உங்கள் மகன் இறந்து விட்டார்" என்று தந்தி வருகிறது. உடனே அவர் மூர்ச்சித்து விழுகிறார். பிறகு ஒருவாறு சுய உணர்வு பெற்று எழுந்திருத்தாலும் அவருடைய பிற்கால வாழ்க்கையே மாறுபட்டு விடுகிறது. ஆனால் அதே சமயத்தில் அவருக்கு அருகில் இருந்து படிக்கும் வேறு ஒருவருக்கு அந்த மயக்கம் வருவதில்லை. முன்னவரிடம் சிறிது அனுதாபம் காட்டுவதோடு அவர் உள்ளக் கிளர்ச்சி நின்று விடுகிறது. ஒரே தந்தி வேறுவேறான உள்ளக் கிளர்ச்சிக்கு காரணமாக இருக்க வேண்டுமானால் அந்த தந்தியில் கண்டுள்ள சொற்களின் பொருளை வேறுவேறாக அறிந்து கொள்ளக் கூடிய சக்தி இருக்க வேண்டும். அந்த சக்திக்கு அடிப்படையாக இருப்பது தான் மனம்.

எதிரிலே ஒரு திரையும் பல வர்ணங்களும் இருப்பதாக வைத்துக்கொள்வோம். அவைகள் ஒரு விதமான உணர்ச்சியை நமக்கு தருகிறது. ஆனால் அதே திரையிலே வர்ணங்களை அழகாக தீட்டிவிட்ட பிறகு வர்ணங்கள் என்றும் திரை என்றும் தனித்தனி உணர்ச்சி மறைந்து ஒரு அழகிய பெண்ணின் உருவம் தென்படுகிறது. அவளுடைய உணர்ச்சிகளும் தோன்றுகின்றன.

முன்பு கண்ட வர்ணங்களே இப்போதும் அந்த திரையில் இருக்கின்றன. இவ்வாறு வர்ணங்களை ஒழுங்கு சேர்த்து ஒரே பொருளாகப் பார்க்கும் சக்தியும் நமக்கு இருக்கிறது. அந்த சக்தியை பற்றி எண்ணும் காலத்தில் மனம் என்பது ஒன்று இருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

மேலே கூறியவற்றில் இருந்து உடலும் மூளையும் இல்லாமல் சூட்சும மனம் என்று ஒன்று இருக்கும் என்பதை அறியலாம். மூளைக்கும் மனதிற்கும் நெருங்கிய தொடர்பு இருந்தாலும் மூளை வேறு, மனம் வேறு. மூளைக்கு

அடங்காமல் மனம் வேலை செய்கிறது. விமானத்தை கட்டுபடுத்தும் விமானி எவ்வாறு அதன் எந்திரங்களைத் தன் விருப்ப படி இயக்குகிறானே அது போலவே உடலிலுள்ள உறுப்புகளைப் பெரியதோர் அளவிற்கு மனம் இயங்குகிறது. மனம் வேகம் நிறைந்தது. ஒன்றாக அனைத்தையும் இணைத்து சிந்திக்கவல்லது. எதிரே உள்ள நிலைமையால் ஏற்பட்ட உணர்விற்கு ஏற்ப செயல் புரிவதோடு எதிர்காலத்தையும் மறைந்த காலத்தையும் எண்ணிச் செயல் புரியக் கூடியது. மனம் கற்பனை செய்யும் ஆற்றலும் வாய்ந்தது. இந்த மனமே மனிதனுக்கு தனி சிறப்பை தருகிறது.

# மாயக் குரங்கான மனம்

மனம் மிகவும் பொல்லாதது என்பதற்கு ஒரு உதாரணம் காட்டுகிறேன். ஒருவனுக்கு ஏதாவது ஒன்றில் விருப்பம் இருக்கலாம். ஆனால் அந்த விருப்பத்தை பிறர் அறிந்தால் அவனை பற்றி தவறாக எண்ணுவார்கள். இது அவனுக்கு தெரியும். இருந்தாலும் அந்த ஆசை மட்டும் விடாது. அந்த நிலையிலே அவன் தன்னை அறியாமலேயே அவனது செய்கையை மற்றவர்கள் ஆமோதிக்க வேண்டுமென்று ஏற்றுக்கொள்ளக் கூடிய ஏதாவது ஒரு காரணம் கற்பிக்கத் தொடங்குவான். அவனிடைய மனம் இந்த வேலையை செய்கிறது. அவன் தெரிந்தே இதற்கான காரணத்தை கண்டுபிடிக்கிறான் அல்லது அவனை அறியாமலே அவன் மனம் அந்த வேலையை செய்ய தொடங்கி இருக்கும். அவனுக்கே இந்த இரகசியம் தெரியாமல் இருக்கலாம். மனம் இதை தந்திரமாக செய்துவிடும். அவனும் அது சரியான காரணம் தான் என்றும் அதனாலேயே அந்த காரியத்தைச் செய்வதாகவும் நிச்சயமாக நம்புவான்.

குடிகாரர்களை நாம் அனைவரும் அடிக்கடி காண்கிறோம். அவன் சாராயம் குடிக்க ஒரு சோகக்கதையையோ அல்லது ஒரு வியாதியையோ காரணமாக சொல்வதை வழக்கமாக கொண்டு இருப்பதை காண்கிறோம். அவன் சாராயத்தினை குடிக்கவில்லை எனில் அவனால் சோகத்தை மறக்க முடியவில்லை அல்லது அவனது வியாதியின் வலியை பொறுக்க முடியவில்லை என்கிறான். எத்தனையோ மருந்துகளை சாப்பிட்ட பின்னும் இந்த வியாதி குணமாகவில்லை, வலியும் குறையவில்லை, ஆனால் இந்த மருந்தை அதாவது சாராயத்தை சாப்பிட்ட பின் தான் வலி குறைந்து நிம்மதி அடைவதாக கூறுகிறான். அவன் விருப்பபடி சாராயத்தை குடிப்பதால் அவன் சோகத்தை உண்மையில் மறந்து விடுகிறான் அதோடு அவன் வலியும் குறைகிறது.

ஆனால் சாராயத்தை குடிப்பதால் தனக்குச் சமுகத்தில் தாழ்வு ஏற்படும் என்று அவன் அறிந்திருகிறான். இருந்தாலும் அந்த ஆசை மட்டும் அவனை விடுவதாக இல்லை. அதனால் அவனுடைய மனம் இந்த மாதிரி ஒரு காரணத்தை அவனை அறியாமலேயே அவனுக்கு கற்பித்து கொடுத்து இருக்கிறது. அந்த காரணம் சரியென்று அவன் முழுதும் நம்புகிறான்.

இவ்வாறு நிகழ்வதில் அவன் தன் காரணத்தைச் சரியென்று நம்புவதோடு இன்னும் சில நேரங்களில் ஒரு ஆச்சர்யமாக நிகழ்வாக அவன் உடல் நிலையும் அதற்கேற்ப மனதும் அமைந்து விடுகிறது. அவன் சாராயத்தை குடிக்காவிட்டால் அவனுக்கு வயிற்று வலியும் நடுக்கமும் வந்து விடுகிறது.

ஒரு சங்கீத வித்வான் தனது கச்சேரிக்குக் கூட்டம் வராததற்குக் இப்படி காரணம் சொன்னார், "இன்றைக்கு குதிரை பந்தயம், அதனால் எல்லோரும் அதை காண சென்று விட்டார்கள்" என்றார் அவர். உண்மையில் அவருடைய கச்சேரி மக்களுக்கு பிடிக்கவில்லை என்கிற விஷயம் அவருக்கு தெரியும். அதை மறைபதற்காக அவர் தெரிந்தே இந்த காரணத்தை கற்பித்து இருக்கிறார்.

இந்த மாதிரி அறிந்தோ அறியாமலோ காரணம் கற்பிக்கும் செயலுக்கு அறிவுப் பொருத்தம் தேடல் என்று பெயர். ஆனால் அது அவ்வுளவு எளிதான செயல் முறை அல்ல. அது இன்னும் சிக்கலானது. மனதிலே ஆழ்ந்து பதிந்து கிடக்கும் ஏதோ ஒரு உணர்ச்சியாலும் இது ஏற்படலாம். வீட்டின் உட்புறச் சுவரில் ஒட்டுவதற்காக ஒருத்தி சிவப்பு நிற காகிதம் வாங்குவதை அவளுடைய கணவன் எதிர்ப்பு தெரிவித்தான். அவளுடைய கணவன், " சிவப்பு நிறமான அந்த சுவர் காகிதம் கண்ணுக்கு தொந்தரவு கொடுக்கிறது" என்று காரணம் கூறினான். அவன் கூறிய காரணத்தை நன்கு ஆராய்ந்து பார்த்த போது அவன் சிவப்பு வர்ணத்தை வெறுத்ததற்கு காரணம் தெரிந்தது. அவனுடைய சிறு வயதிலே அவன் பள்ளியில் படித்துக் கொண்டு இருந்த போது ஒரு சமயம் தண்டனை பெறுவதற்காக தலைமை ஆசிரியர் அறைக்கு செல்ல வேண்டி இருந்தது.

அப்போது அந்த அறைக்கு சிவப்பு நிற சுவர் காகிதம் ஒட்டப்பட்டு இருந்தது. அந்த நிறம் அவன் சிறு வயதிலேயே பெற்ற தண்டனையின் வேதனை உணர்ச்சியை வெளிபடுத்துவதாக இருந்தது. அதனாலே அவன் மனைவியின் சிவப்பு நிற சுவர் காகிதம் அவனுக்கு பிடிக்காமல் போனது. அதற்கு அவன் அறிவு பொருந்த தேடல் காரணமாக இவ்வாறு சொல்கிறான் என்று பிராய்டு என்ற மனத்தத்துவர் கூறுகிறார்.

இந்த உணர்ச்சி இதுவரையில் எங்கிருந்தது? அவனுக்கு இதைப் பற்றி நல்ல ஞாபகம் கூட அவனுக்கு இல்லையே ? அவ்வாறிருக்க அந்த உணர்ச்சி

எங்கே பதுங்கி கிடந்தது? இப்பொழுது எப்படி அது மேலே வந்தது? இவற்றையெல்லாம் தெரிந்து கொள்வதற்கு முதலில் மனத்தின் அமைப்பைப் பற்றி இன்னும் சற்று விரிவாக அறிந்து கொள்ள வேண்டும்.

அறிவுப் பொறுத்தா தேடுவதிலே மற்றும் ஒரு வகை யுண்டு.

ஜோசப் கணக்குப் பரிட்சையிலே வெற்றி பெறவில்லை. "ஏண்டா இப்படி ஆயிற்று" என்று கேட்டால், "அது என் குற்றமில்லை, ஆசிரியர் சரியாக கற்றுக் கொடுக்கவில்லை" என்று அவன் பதில் சொல்கிறான். தான் சொல்வது சரியான காரணம் என்று கூட அவன் நினைத்துக்கொண்டு இருக்கிறான்.

எனக்குத் தெரிந்த இளம் கவிஞர் ஒருவர் தமது பாடல்களைப் பத்திரிகையாசிரியர்கள் ஏற்றுக் கொள்ளாதற்கு அடிக்கடி இப்படி ஒரு காரணம் சொல்வார், "இந்த பத்திரிகை ஆசிரியருக்கு உண்மையான கவிதையை அறிந்து கொள்ளத் தெரியவே தெரியாது. இவர்கள் ரசிக்கும் தன்மை இல்லாதவர்கள்", என்று கோபமாக பேசுவார்.

இவ்வாறு குற்றத்தைப் பிறர்மேல் ஏற்றிச் செல்லுவதற்கு மனதின் தத்துவத்திலே ஆட்சேபம் என்று அழைக்கபப்டுகிறது. ஆட்சேபம் மற்றும் அறிவு பொருத்தலுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. பல சமயங்களிலே இரண்டையும் பிரித்துப் பார்ப்பது கூட சிரமமாக இருக்கும்.

இந்த இரண்டு தன்மைகளுக்கும் அடிப்படியான காரணம் ஒன்று தான். தன்னைப் பற்றிப் பிறர் இழிவாக கருத்தாகக் கூடாது என்ற எண்ணமே இங்கே வேலை செய்கிறது. மனதின் மாயச் செயல்களில் இதுவும் ஒன்று. ஆதலால் அந்த மனத்தைப் பற்றி இன்னும் சற்று விரிவாக தெரிந்து கொள்வோம். அப்பொழுதுதான் அதன் மாயத்தைப் பற்றி ஓரளவு நன்கு புரிந்துகொள்ள முடியும். இதை வரும் அத்தியாயத்தில் காண்போம்.

# ஆழ் மனம்

இரண்டு அடுக்கு மாடி வீடு ஒன்று. ஓரடுக்குத் தரை மட்டத்தில் இருக்கிறது. மற்றொன்று தரை மட்டத்திற்குக் கீழே பூமிக்குள் மறைந்திருக்கிறது. மேலேயுள்ள மாடியில் வசிப்பவர்கள் பொதுவாக மரியாதையுள்ள பொருக்கி எடுத்த கூட்டத்தை சேர்ந்தவர்கள். கீழ்ப்பாகத்திலே கூட்டம் அதிகம். அதில் இருப்பவர்கள் அனைவரும் காட்டுமிராண்டிகள். சுயநலக்காரர்கள், தங்கள் சுகமே பெரிதென மதிப்பவர்கள். பிறரைப் பற்றிய கவலையே இல்லாதவர்கள். மானம் மரியாதை என்ற பேச்செல்லாம் அவர்களுக்கு அர்த்தமற்றது. ஆனால் அவர்கள் வலிமைக்கும் வேகத்திற்கும் பேர்போனவர்கள். அவர்கள் திடீரென்று மேல் மாடிக்குள் நுழைந்து ஆதிக்கம் செலுத்த முயல்வார்கள்.

இப்படிப்பட்ட ஒரு வீட்டை போல தான் நமது மனம் இருக்கிறதென்று சிக்மண்ட் பிராய்டு போன்ற மனோதத்துவர்கள் கருதுகிறார்கள். மனதின் ஒரு பெரும் பகுதி மறைந்திருக்கிறதாம். அதில் பதுங்கிக் கொண்டு இருக்கிற ஆசைகள், எண்ணங்கள், உணர்ச்சிகள் திடீர்ரென்று மேலே கிளம்பி ஆர்பாட்டம் செய்யும் என்று கருதுகிறார்கள். இவைகள் எல்லாம் கட்டுக்கடங்காமல் மேல் வருவதை தடுப்பதற்குப் காவலர் போல் ஒரு சக்தி இருப்பதாகவும் அவர்கள் எண்ணுகிறார்கள்.

மேலோ சொன்னவாறு மறைந்திருக்கும் மனப்பகுதியைத் தான் ஆழ் மனம் என்கிறார்கள். ஆழ் மனம் என்பது தனியான ஒன்று அல்ல என்பதை நாம் உணர வேண்டும். மனதின் மறைந்து நிற்கும் பாகம் தான் அது. கடலின் விசாலமான மேற்பரப்பை மனம் என்று சொன்னால் அந்த பரப்பின் கீழ் ஆழ்ந்து மறைந்து நிற்கும் நீர்பரப்பை மறை மனம் அல்லது ஆழ் மனம் என்று சொல்லாம். இரண்டும் வேறல்ல. ஒன்றே தான்.

கடலின் ஆழத்தில் உள்ள தண்ணீர் சதா மேலே வந்து மேற்பரப்பின் உஷ்ணத்தை மாற்றுகிறது. அது போலவே மறை மனமும் நமது எண்ணம், செய்கை முதலியவைகளை மாற்ற முயலுகிறது.

ஆழ் மனதின் ஆராய்ச்சியைக் கொண்டு ஒருவனுடைய நடத்தைக்குக் காரணம் கண்டு பிடிக்கிறார்கள். குழந்தை பருவத்தில் அடக்கி வைக்கப்பட்ட பல ஆசைகளும் உணர்ச்சிகளும் மறை மனதில் பதிந்து பிற்காலத்தில் பல

வகையான செய்கைகளுக்குப் காரணமாகின்றன. அவைகளே ஒருவனுடைய தன்மையையும் அமைக்கின்றன. அதனால் ஆழ் மனதின் தன்மையை முதன் முதலில் ஆராய்ச்சி செய்த சிக்மண்ட் பிராய்டு என்ற வியன்னா நகரத்து வைத்தியர் குழந்தைப் பருவத்திலேயே ஒருவனுடைய பிற்கால வாழ்க்கை அமைப்பு நிர்ணயமாகி விடுகின்றது என்று கருதுகிறார்.

மனப்போக்கு இஷ்டம்போல மாறிமாறி அமைவது அல்ல. அது பழைய உணர்ச்சிகளையும் அனுபவங்களையும், இரு கரைகளாக உடைய ஓடை போன்றது. அவற்றிற்கு அடங்கித்தான் அது பொதுவாகச் செல்லுகின்றது. மனதின் இரு அம்சங்களான வெளிமனமும், மறை மனமும் ஒன்றை ஒன்று வாழ்க்கை முழுவதும் பாதிக்கின்றன. அதன் பயனாக ஒருவனுடைய நடத்தையும் குணமும் அமைகின்றன.

ஆழ் மனதில் மனித ஜாதியின் அனுபவத்தால் வந்த சில உணர்ச்சிகளும் தனி மனித மனிதனுடைய அனுபத்தால் சில உணர்ச்சிகளும் இருப்பாதாக டாக்டர் யுங் அபிப்பிராயப் படுகிறார். முதல் வகையில் இயல் அசைவுகளும், மனித வர்க்கத்துக்கே பொதுவான ஆசைகளும் அடங்கி இருக்கின்றன. மிருகம் முதலிய பிறவிகளுக்கும் பொதுவானவை சிலவும் உண்டு. காதல் உணர்ச்சி இயல்பாக உள்ளது. அதுபோலவே பய உணர்ச்சியும். இவையெல்லாம் பொதுவாக எல்லோருக்கும் ஏற்பட்டவை. இந்த இயல் அசைவுகளைப் பற்றி வேறு பகுதியில் தனித்தனியே காண்போம்.

இவற்றுடன் பிறப்பிலிருந்து ஏற்பட்ட அனுபவங்களும் உணர்ச்சிகளும் ஆழ் மனதில் நின்று ஒவ்வொரு மனிதனையும் அமைக்கிறது. அந்த உணர்ச்சிகளை பற்றி இன்றும் நமக்கு நியாபகம் இருக்காது. என்றாலும் அவையே நம்மை ஆட்டி வைக்கிறது.

நாம் பலவாறு எப்போதும் எண்ணுகிறோம். ஆசைப்படுகிறோம். ஆனால் அவற்றையெல்லாம் காரியத்தில் செய்து அனைத்தையும் நிறைவேற்றிக் கொள்ள முடிவதில்லை. சிலவற்றை நிறைவேற்றச் சமூகம் இடம் கொடுக்காது. சமூக விதிகள் ஒரு தடையாக இருக்கிறது. நீதிநெறிகள் ஒரு பக்கம், மதம் ஒருபக்கம் -இவையனைத்தும் சேர்ந்து நமது ஆசைகளெல்லாம் நிறைவேற்றிக் கொள்ள இடம் கொடுப்பதில்லை. அதனால் பல எண்ணங்களையும் ஆசைகளையும் நாம் கைவிட வேண்டியதாக இருக்கிறது. சிலவற்றை அடக்கிக் கொள்ளவேண்டிய நிலை இருக்கிறது.

இப்படி அடக்கப்பட்ட எண்ணங்களும் ஆசைகளும் மயக்கமடையா மனதில் பதிந்து வெவ்வேறு வகையில் நமக்கே தெரியாமல் வெளியாகின்றன. விநோதமாக நடந்து கொள்ளுதல், பெயர்களையும் ஊர்களும் மறந்து விடுதல், காரணமில்லாமல் பயமடைதல் முதலானவைகள் இதனால் ஏற்படுகின்றன.

பிறருடைய குற்றங்களை எப்போதும் பேசுவது சிலருடைய இயல்பாக இருக்கிறது. சிலர் மற்றவர்கள் சாதித்த நல்ல காரியங்களைப் பற்றி மிக லேசாகப் பேசுவார்கள். சிலர் தாம் மேற்கண்ட காரியங்கள் கைகூடாத காலத்தில் பிறர்மேல் பழி சுமத்துவார்கள். இவைகள் எல்லாம் ஆழ் மனதின் கோளாறுகள்.

சிலரிடம் ஏதாவது ஒரு வகையில் குற்றம் கண்டுப்பிடிக்கலாம். உடல் தோற்றம், அறிவுத் திறமை, ஒழுக்கம் இவை போன்றவற்றில் அக்கரையுள்ளவர்கள் சமூக சேவை போன்ற ஏதாவது ஒரு துறையில் ஈடுபட்டு அதில் உயர்வடைய முயல்வார்கள். காதல் வாழ்க்கை கைகூடாத பலர் இலக்கியம், ஓவியம், இசை, விஞ்ஞானம், மதம் முதலிய துறைகளில் சிறந்தோங்கி இருக்கிறார்கள் என்று சிக்மன்ட் பிராய்டு நிருபித்துக் காட்டுகிறார்.

தானே பெரியவன் என்று நிலைநாட்ட வேண்டும் என்று ஒவ்வொருவனுக்கும் ஆசையுண்டாகிறது. ஆனால் அந்த ஆசை நிறைவேறாமல் பலருடைய மனதில் அடங்கிக் கிடக்கிறது. ஆழ் மனதில் அதனால் கோளாறுகள் உண்டாகின்றன. பொறாமை, கொடுமை, தூற்றுதல், அனாவசியமாகச் சண்டை இடுதல். சிடுமூஞ்சித்தனம் முதலிவை இதன் விளைவாகப் பிறக்கின்றன.

நன்கு படிக்காத மாணவனுக்கு தெரிவு ஒரு கொடிய தலைவலியை தந்து விடுகிறது. பொய்த் தலைவலி அல்ல. உண்மையாகவே தலைவலி. அந்த மாணவனுக்கே அதன் காரணம் தெரியாது.

மேற்கூறியவை எல்லாம் அந்தப் பொல்லாத ஆழ் மனதின் வேலை. இதை நன்கு அறிந்து கொண்டால் அதனால் நன்மை உண்டாகும். ஆசைகளை அடக்கி நசுக்க முடியாமல் அவற்றை உயர் மாற்றம் செய்து விட்டோம் என்றால் அப்போது இது போன்ற விரும்பத் தகாத கோளாறுகள் ஏற்படாது. ஆசைகள் எல்லாவற்றையும் அடைய முடியாது. சிலவற்றை அடைய விடாமல் தடுப்பதும் சமூகத்திற்கு தீங்காக முடியலாம். ஆதலால்

அவைகளை வேறு வழியில் திருப்பித் தனக்கும் சமூகத்திற்கும் நன்மையாக செய்து கொள்வதே அறிவுடைமையாகும். இவாறு உணர்ச்சிகளை வேறு வகையில் திருப்புவதர்க்குத் தான் உயர் அறிவு மாற்றம் செய்தல் என்று பெயர்.

இதற்கு ஆழ் மனதை பற்றிய ஆராய்ச்சியும் அறிவும் பெரிதும் உதவி செய்கிறது.

ஆழ் மனதைப்பற்றி மாறுபட்ட பல கருத்துகள் இருக்கின்றன. அவைகளைப் பற்றி அடுத்த பகுதியில் காண்போம்.

## ஆழ்மனதை பற்றிய பல்வேறு கருத்துக்கள்

மனோதத்துவம் எனது தனிதனித்துவமான சாஸ்திரமாகச் சமீபகாலத்தில் பிரிந்து வளர்ந்து வருகிறது. மனதின் தன்மைகளை பற்றியும் அதன் அமைப்பைப் பற்றியும் ஆராய்ச்சி செய்தவர்கள் பலர். பொதுவாக அவர்கள் எல்லோரும் மனதை ஒரே மாதிரி இயல்புள்ள ஒரு முழுப் பொருளாகவே கருதி வந்தார்கள். முதன் முதலில் மனதில் வெளிமனம், ஆழ் மனம் என இரு பகுதிகள் இருப்பதாக சிக்மண்ட் பிராய்ட் தான் தமது ஆராய்ச்சியின் பயனாகக் கூறினார். அந்த இரண்டும் வேறு வேறாகப் பிரிக்கப்பட்டன இரண்டு பாகங்கள் அல்ல எனினும் அவற்றின் தன்மைகள் வேறுபட்டவை என்பது அவரது அபிப்பிராயம் .

ஆழ்மனதில் பதிந்துள்ள எண்ணங்களைப் பற்றியும் அனுபவங்களைப் பற்றியும் அறிந்து, அவைகளின் மூலம் சில நோய்களை சோசர் ப்ரூயர் என்ற வியன்னா நகரத்து வைத்தியர் குணப்படுத்தினார். அவர் அறிந்த விஷயங்களைப் புத்தக வடிவமாக வெளியிடும்படி பிராய்டு தூண்டினார். அவ்வாறு அவர் வெளியிட்டபோதிலும் பின்னால் அவர் தொடர்ந்து ஆழ் மனதைப் பற்றி ஆராய்ச்சி செய்யவில்லை. சிக்மண்ட் பிராய்டு தான் தனியாக நடத்திவந்தார். அவருடைய எண்ணங்களை ஆரம்பத்தில் பலர் எதிர்த்தார்கள். ஒருவரும் அவருடன் சேர்ந்து ஒத்துழைக்க முன் வரவில்லை. ஆனால் 1902ம் வருஷத்திற்கு பிறகு சிலர் அவரோடு சேர்ந்து ஆராய்ச்சிகள் நடத்த வந்தார்கள்.

ஆழ் மனதைப் பற்றி விரிவாக ஆராய தொடங்கவே புதிய விஷயங்கள் வெளியாயின. ஆழ் மன ஆராய்ச்சியே தனிப்பகுதியாக பிரிய தொடங்கியது. பிராய்டு அதற்கு மனப் பகுப்பியல் எனப் பெயரிட்டார்.

ஆழ் மனதைப் பற்றிய உண்மை தெரிந்தது முதல் மனத்தத்துவ சாஸ்திரத்திற்கு ஒரு தனி உயர்வு பிறந்திருக்கிறது. மனிதனுடைய நடத்தைக்கு முக்கிய காரணமாக இருப்பது இந்த ஆழ் மனமே என்பது சிலருடைய கருத்து. மனம் ஒரு பனிக்குன்று போன்றதென்று அவர்கள் கூறுகிறார்கள். பனிக்குன்று கடலிலே மிதக்கும் போது அதன் ஒரு சிறுபகுதி மட்டுமே வெளியில் தோன்றும். மற்ற பாகங்கள் எல்லாம் நீர் மட்டத்திற்கு உள்ளே ஆழ்ந்து மறைந்து இருக்கும். அதுபோலவே மனதின் ஒரு பகுதிதான் வெளிப்படையாகத் தோன்றி வெளி மனமாக இருக்கிறதென்றும், மற்ற பகுதி மறைந்து நின்று ஆழ் மனமாக இருக்கிறது என்றும் அவர்கள் கருதினர். இப்படி மனதின் பெரும் பகுதி மறைந்திருந்தாலும் அப்பகுதிதான் ஆதிக்கம் செலுத்துகிறது.

சிக்மன்ட் பிராய்டும் அவரைப் பின்பற்றுபவர்களும் என்ன கருதுகிறார்கள் என்றால், வெளி மனத்தால் நினைப்பவைகள் எல்லாம் ஆழ் மனதால் பாதிக்கப்படுகின்றன. ஆனால் அவை எவ்வாறு பாதிக்கப்படுகின்றன என்பதை அறிந்து கொள்வது வெகு அருமை.

பிராய்டின் கருத்துக்களை எல்லா மனத் தத்துவர்களும் ஏற்றுக்கொள்வதில்லை. மனப் பகுப்பியலாளர்கள் சிலரும் பூரணமாக ஏற்றுக்கொள்வதில்லை. ஆல்பிரட் ஆட்லர், டாக்டர் சீ.யுங் என்ற மனப்பகுபியலாளர்கள் அவர்களில் முக்கியமானவர்கள்.

பொதுவாக சமூகத்தால் ஏற்றுக்கொள்ளப்படாத உணர்ச்சிகளும், காம இச்சைகளும் ஆழ் மனதில் அமுத்திக் கிடப்பதாகப் பிராய்டு கூறினார். அந்த உணர்ச்சிகள் மேல் எழுந்து ஆதிக்கம் செலுத்த முயல்கின்றன என்றும் மனிதன் அவற்றை அடக்க முயல்வதால் மனதில் ஒரு போராட்டம் நிகல்கின்றதென்றும் அதன் விளைவின் படி அவனுடைய தன்மையும் நடத்தையும் அமைகின்றன என்றும் அவர் விளக்கம் கொடுத்தார். ஆட்லர் வேறுவிதமாக இருக்கிறது. அவர் கூறுவதாவது, ஒவ்வொரு மனிதனுக்கும் தான் ஏதாவது ஒரு துறையில் தலைமை ஸ்தானம் வகிக்க வேண்டுமென்ற ஆர்வம் இருக்கிறது. அந்த ஆர்வமே அவனுடைய குறைபாடுகளை நிவர்த்தி

செய்து கொள்வதற்கு வேண்டிய குறைபாடுகளை நிவர்த்தி செய்து கொள்வதற்கு வேண்டிய சக்தியைக் கொடுக்கின்றது. அதன் மூலம் அவனுடைய தன்மையும் நடத்தையும் அமைகின்றன. டெமாஸ்தனிஸ் முதலில் ஒரு திக்குவாய் கொண்டவராக இருந்தார். ஆனால் அவர் மிகப்பெரிய மேடை பேச்சாளாராக வர வேண்டும் என்று விரும்பினார். இறுதியில் அவர் சிறந்த மேடை பேச்சாளராக மாறி சாதனை செய்து கொண்டு இருந்தார் என்பதை அனைவரும் அறிவோம். இவருடைய சரித்திரம் ஆட்லரின் கருத்தை மெய்பிக்கத் தக்க சான்றாக இருக்கிறது. மனிதனுக்கு ஓரளவு அதிகாரம் செலுத்தக்கூடிய வாய்பில்லாவிட்டால் அவன் தம்மை தாழ்மை உணர்ச்சியால் பீடிக்கப் படுகிறான் என்பது ஆட்லரின் கருத்து.

மனிதனுக்குள்ளே விவரிக்க முடியாத ஓர் உயிர் வேகம் இருக்கிறது. அதிலிருந்துதான் பல இயல்புகள் பிறக்கின்றன என்பது டாக்டர் யுங்கின் எண்ணம். எல்லாத் துறைகளிலும் மனம் விரிவடையாமல் ஏதாவது ஒரு துறையில் மட்டுமே அது வளர்வதாலேயே ஆழ் மனக்கோளாறுகள் ஏற்படுவதாக அவர் கருதுகிறார். மக்களை இரு வகையாகப் பிரிக்கலாம். உள்ளக் கிளர்ச்சி மிகுந்தவர்கள் ஒரு வகை. சிந்தனை சக்தி மிகுந்தவர்கள் அடுத்த வகையாக இருக்கிறார்கள். உலகத்திலே ஒருவகையான செயல் புரிய உள்ளக் கிளர்ச்சி அதிகம் வேண்டி இருக்கும்.

ஆதலால் அவற்றிற்கு ஏற்றவாறு தன்மை அமைந்த மனிதர்கள் அந்த செயல்களைச் செய்ய வேண்டும். ஆனால் பல சமயங்களில் மனிதன் தன் இயல்புக்கு ஒவ்வாத காரியத்தையும் செய்ய நேரிடுகிறது. அப்போதுதான் அவன் மனதில் போராட்டம் நேர்ந்து ஆழ் மனக்கோளாறுகள் உண்டாகின்றன. மேலும் ஆழ் மனம் தனிப்பட்ட மனிதனுடைய செய்கைகளால் மட்டும் அமைவதில்லை என்று யுங் கருதுகிறார். பாரம்பரியத்தாலும் ஆழ் மனக் கோளாறுகள் உண்டாகின்றன என்று அவர் சொல்லுகிறார்.

மனப் பகுப்பியலாலர்களுக்குள்ளே சிறு சிறு கருத்துக்களில் மாறுபாடுடைய வேறு சிலரும் இருக்கிறார்கள். இப்படிக் கருத்து வேறுபாடுகள் இருப்பினும் மனத் தத்துவ ஆராய்ச்சியிலே மனப் பகுப்பியல் ஒரு மிக்கியமான முன்னேற்றத்திற்கு காரணமாக இருக்கிறது என்பதை யாரும் மறுக்கமுடியாது. மனப் பகுப்பியலின் அஸ்திவாரமாக உள்ள கொள்கைகள் உண்மையானவை என்பதில் யாதொரு ஐயமுமில்லை.

# மூன்று பிரிவுகள்

மனம் என்பது ஒரு பொருளல்ல என்று கண்டோம். அது கை கால் போன்ற உறுப்பு அல்ல என்றாலும் மனிதனிடத்திலே உள்ள ஒரு முக்கிய அம்சம் என்றும் கண்டோம். மனம் என்கிற மாயம் மனிதனுக்குத் தனிச் சிறப்பு அளிக்கிறதென்றும், அதை நினைவு அல்லது வெளி மனம் என இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம் என்றும் கண்டோம்.

மனத்திலே உண்மையில் இந்த விதமான பிரிவுகள் இல்லை. அது தொழிற்படும் வகையை அனுசரித்து இந்த பிரிவினைகள் கூறப்படுகின்றன. ஆராய்ச்சிக்கு எளிதாக இருக்கும் பொருட்டு இந்த மனத்தை இன்னும் சற்று விரிவாக மூன்று பிரிவுகளாகச் செய்யலாம். வெளி மனம், ஆழ் மனம் என்ற இரு பிரிவுகளைப் பற்றி முன்பே அறிவோம். அந்த மூன்றாவது பிரிவு என்ன என்பதை இனிக் கவனிப்போம்.

நமக்கு லேசாக அறிமுகமானவர் ஒருவர் பல நாட்களுக்குப் பிறகு வருகிறார். அவருடைய பெயர் சட்டென்று ஞாபகத்திற்கு வருவதில்லை. கொஞ்ச நேரம் யோசித்துப் பார்க்கிறோம். பல பெயர்களைச் சொல்லிக்கூடப் பார்க்கிறோம். "மனதிலே இருக்கிறது, சொல்ல முடியவில்லை" என்றும் சொல்ல தோன்றுகிறது. பிறகு திடீரென்று பெயர் ஞாபகத்திற்கு வந்து விடுகிறது. "நீங்கள் ராபர்ட் அல்லவா? வாருங்கள், வாருங்கள். பார்த்து நீண்ட நாட்கள் ஆகிறது" என்று வரவேற்க ஆரம்பிக்கிறோம்.

நினைவு மனதில் அந்த பெயர் இருந்தால் ஞாபகத்திற்கு கொண்டு வர அவ்வுளவு நேரமாகாது. ஆனால் ஆழ் மனதில் இருப்பாதால் உடனே நினைவிற்கு வருவதில்லை. ஆழ் மனதில் இருந்து எல்லா நினைவுகளையும் எளிதில் கொண்டு வர இயலாது. அதனால் இந்த விஷயம் இடையிலே எங்கேயோ இருந்திருக்க வேண்டும்.

நேற்று உண்ட சான்ட்விச் பெயர் நமது வெளி மனதில் சாதரணமாக இருப்பதில்லை. நாம் அதை இப்பொழுது நினைத்துக் கொண்டா இருக்கிறோம். தனிப்பட்டா விசேஷம் கொண்டதாக ஒரு வாய்ப்பு இருந்தால் மட்டுமே அதை பற்றி நினைத்து கொண்டு இருப்போம். ஆனால் சாதரணமாக அந்த வெளி மனதில் இருப்பதில்லை. ஆனால் கொஞ்சம்

நினைத்துப் பார்த்தால் நாம் சாப்பிட்ட சண்ட்விச் பெயர் ஞாபகத்திற்கு வந்து விடும்.

இப்படி கொஞ்சம் நினைத்தும் ஞாபகத்திற்கு வரும் விஷயங்கள் எல்லாம் உள்மனம், ஆழ் மனம் என்னும் பகுதியில் இருப்பதாக கூறுவார்கள். நினைவு மனத்தினை ஒட்டியது போலவே உள்ள அடிபாகம் இது. அதற்க்கும் கீழ் இருப்பது ஆழ் மனம். ஆகவே ஆராய்ச்சியின் பொருட்டு மனமானது நினைவு மனம், உள்மனம், ஆழ் மனம் என்ற மூன்று அம்சங்களாக பிரிக்கப்பட்டுள்ளது. இவற்றை மனத்தின் மூன்று நிலைகள் என்று கூறலாம். மனம் என்று சாதரணமாகக் கூறும்போது வெளிமனம் அல்லது நினைவு மனதையே நாம் குறிப்பிடுகிறோம்.

# ஞாபகமும் கற்பனையும்

வாழ்க்கையில் எத்தனை எத்தனையோ சம்பவங்கள் நிகழ்கின்றன. எத்தனை எத்தனை அனுபவங்கள், புலன் உணர்ச்சிகள் உண்டாகின்றன. அவையெல்லாம் மனத்திலே எங்கேயோ பதுங்கிக் கிடக்கின்றன. சில விஷயங்கள் நினைத்த மாத்திரத்திலே ஞாபகத்திற்கு வந்து விடுகின்றன. சில விஷயங்கள் அவ்வுளவு விரைவிலே நினைவுக்கு வருவதில்லை.

சென்ற வாரம் செவ்வாய் கிழமையன்று சாப்பிட்ட பொரியல் அல்லது சாம்பார் ஞாபகத்தில் இருக்கிறதா? அது மறந்தே போகிறது. அப்படி மறந்து போவதும் நாளது தான். அனாவசியமான பல விஷயங்கள் ஞாபகத்தில் வைத்திருந்தால் மனதிற்கு அது வீண் சுமைதானே?

ஆனால் அந்தச் செவ்வைக்கிழமையன்று சாப்பிட்ட சாம்பாரால் வயிற்றுக் கோளாறு ஏற்பட்டுத் தொந்தரவு உண்டாகி இருந்தால் அந்த சாம்பாரைப் பற்றிய நினைவு அவ்வுளவு சுலபமாக மறந்து போவதில்லை. “அப்பா, அந்த சாம்பாரைச் சாப்பிட்டு என் வயிறு கெட்டு போச்சு” என்று பல நாள் சொல்லிக்கொண்டே இருக்கிறோம்.

நமக்குத் துன்பத்தையோ, இன்பத்தையோ அளித்த விஷயங்கள் ஞாபகத்தில் இருக்கின்றன. அவற்றிலும் கூடத் துன்பம் தந்த விஷயங்கள் கொஞ்சம் விரைவிலே மறந்து போகின்றன. இன்ப நினைவுகள் நன்கு மனத்திலே பதிந்து நிற்கின்றன. துன்பம் தந்தவை நினைவில் இருந்தாலும் அவை இப்பொழுது கூர்மை மழுங்கி இருக்கின்றன. அவற்றின் வேகம் வரவரக் குறைந்து போகின்றது.

ஒருவன் இளமைப் பருவத்திலே தான் படித்த பள்ளிக்கூடம், கல்லூரி ஆகியவற்றைப் பெருமையோடு, மகிழ்ச்சியோடு சென்று பார்த்து வருகின்றேன். அங்கு பெற்ற இன்ப அனுபவங்கள் எல்லாம் அப்பொழுது ஞாபகத்திற்கு வருகின்றன. அங்கு பட்ட துன்பகள் எல்லாம் மறந்துபோய் விடுகின்றன. நினைவிற்கு வந்தாலும், “ அப்பா, அந்தக் கணக்கு வாத்தியாரா! ரொம்ப பொல்லாதவர். சரியான அடி கொடுப்பார். இருந்தாலும் நல்லவர். அவர் அப்படி எல்லாம் சொல்லி கொடுக்காமல் இருந்து இருந்தால் எனக்குக் கணக்கே வந்திருக்காது” என்று தான் பொதுவாகச் சொல்லத் தோன்றும்.

சிலபேருக்கு ஞாபக சக்தி மிக அதிகமாக இருக்கும். ஒரு தடவை கேட்டதை அப்படியே திருப்பிக் கூறக் கூடியவர்கள் உண்டு. ஏகசந்தக் கிராகிகள் என்போர் ஒருமுறை சொல்வதை அப்படியே திருப்பிக் கூறிவிடுவார்களாம். மாம்பழக் தவிச்சிங்க நாவலருக்கு விஷக்காய்ச்சல் வந்ததால் இளமையிலே கண் குருடாகிவிட்டது. ஆனால் அவருடைய ஞாபக சக்தி மிக அற்புதமானது. அது நூல் முழுவதையும் யாராவது படித்துக் காட்டினால் உடனே அவர் அதைத் திருப்பிக் கூறிவிடுவாராம்.

சிலருக்கு ஞாபக சக்தி குறைவாக இருக்கும். வெகு சீக்கிரத்திலே மறந்து விடுவார்கள். வயதாக ஆக ஞாபக சக்தி குறைவதும் உண்டு. ஆனால் ஞாபகசக்தியே இல்லாதவர்கள் கிடையாது. யாருக்காவது அவருடைய தாயார் மறந்து போகிறதா? அந்த அளவுக்காவது ஞாபக சக்தி இருக்கும்.

மனம் ரொம்ப மாயமானது என்று சொன்னேன் அல்லவா? அது சில சமயங்களில் அதற்குப் பிடிக்காதவற்றை மறந்து விடும். எப்படியோ அது ஞாபகத்தில் வராமல் செய்து விடும். எனக்கு ஒரு நண்பன் இருக்கிறான். அவனுக்கு மற்றவர் கொடுத்திருக்கிற கடனைப் பற்றி அவனுக்கு உண்மையாகவே ஞாபகம் வராது. ஆனால் எப்பொழுது அவன் ஒரு ரூபாய் சில்லறை கொடுத்துவிட்டால் அதை மனதில் வைத்துக் கொண்டு கேட்டுக்கொண்டே இருப்பான்!.

வாழ்க்கையின் முற்ப்போக்கு ஞாபகசக்தி அவசியம். நாம் அடைந்த அனுபவங்கள் தனித் தனியாக நினைவில் இல்லாமல் போனாலும் அவற்றின் விளைவாக நாம் எதிர்கால வாழ்க்கையை நல்ல முறையில் அமைத்துக் கொள்ள வேண்டுமல்லவா? நெருப்பைத் தொட்டால் சுடும் என்று குழந்தைக்கு ஆரம்பத்தில் தெரியாது. ஒரு தடவை அல்லது இரண்டு தடவை அந்த அனுபவம் ஏற்பட்ட பிறகாவது மறுபடியும் நெருப்பைத் தொடாமல் இருக்க வேண்டும் அல்லவா?

ஞாபகத்தில் இரண்டு வகையுண்டு. சொந்த அனுபவத்தைப் பற்றிய ஞாபகம் ஒரு வகை. பிறருடைய அனுபவத்தைப் பற்றி தெரிந்துகொண்டு அதை ஞாபகத்தில் வைத்திருப்பது ஒருவகை. சிவாஜியின் வீர செயல்களைப் பற்றி கேட்டு இருக்கிறோம். படித்திருக்கிறோம். அவை நமது சொந்த அனுபவம் அல்ல. இருந்தாலும் அவையும் ஞாபகத்தில் இருக்கின்றது அல்லவா? இந்த இருவகை ஞாபகமும் அவசியமே.

வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கு ஊக்கமும், உற்சாகமும், ஊட்டமும் அளிப்பவற்றை ஞாபகத்தில் வைத்திருப்பது எவ்வுளவு அவசியமோ அவற்றிற்கு மாரனவற்றையும், தளர்ச்சியையும் தோல்வி மனப்பான்மையை தருவது எதுவோ அதையும் மறப்பது அவசியம்.

சொந்த அனுபவத்தையும் பிறர் அனுபவங்களையும் ஞாபகத்தில் கொண்டு அவற்றில் பயனடையக்கூடிய திறமை பெரிய அளவில் மனிதனுக்குத் தான் உண்டு. விலங்குகள் முதலான மற்ற உயிர்கள் சொந்த அனுபவங்களால் ஓரளவிற்கே பயனடையும். பிறர் அனுபவங்களால் பயனடைவதே அநேகமாகக் கிடையாது.

ஞாபகத்திற்கும் கற்பனைக்கும் தொடர்புண்டு. ஆனால் இரண்டும் வேறு வேறு பூஞ்சோலையில் கண்ட அழகிய நங்கையை மனக்கண் முன்பு கொண்டு வரலாம். அவளுடைய தோற்றம் தெளிவாக மனக்கண் முன்பு தோன்றுவதற்கு ஞாபக சக்தி அவசியமாகிறது. நாமே ஒரு ஒப்பற்ற ஒரு அழகிய பெண்ணை கற்பனை செய்யலாம். இந்தக் கற்பனை நங்கையைக் கற்பனை செய்யலாம். இந்தக் கற்பனை நங்கையை அழகுபடுத்த நமது ஞாபக சக்தி உதவுகிறது. பல இடங்களிலே பல்வேறு பெண்களை கண்டு களித்த அழகுகளை எல்லாம் நமது ஞாபக சக்தி திரட்டி இந்த கற்பனை நங்கையை உருவாக்க உதவுகிறது. ஒரு பெண்ணின் கண்கள் அழகாக இருக்கும். இன்னொரு பெண்ணின் இதழ்கள் வசீகரமாக இருக்கும். ஞாபகத்தில் இருந்த இவற்றை எல்லாம் சேர்த்துத் திரட்டி அந்த கற்பனை உருவாகிறது.

சில சமயங்களில் எது கற்பனை, எது ஞாபகம் என்று தெரியாமல் போவதுண்டு. ஒருவன் புதிதாக ஒரு கதை கற்பனை செய்வதாக எண்ணிக் கொண்டு இருப்பான். ஆனால் உண்மையில் அவன் எப்பொழுதோ படித்த கதையாகவே அது இருக்கும். அதேபோல ஞாபகத்தில் இருந்து சொல்லுவதாக ஒன்றை ஒருவன் சொல்லுவான். ஆனால் அது வெறும் கற்பனையாகவே இருக்கும்.

ஞாபகத்திலே இப்படிப் பல தவறுகள் ஏற்படுவதுண்டு. காலம் செல்லச் செல்ல ஒரு சம்பவத்தைப் பற்றிய நுணுக்கமான விவரங்கள் மறைந்து போகின்றன. அந்த இடத்தைக் கற்பனை பூர்த்தி செய்து விடுகிறது. ஒரு சம்பவத்தைப் பற்றி பிறருக்கு எடுத்து சொல்லும்போது சாதாரணமாகத் தம்மையறியாமலேயே சில விஷயங்களை மிகைப்படுத்தியும், சில

விஷயங்களை லேசாகவும் சொல்லுவதுண்டு. சொல்லுவது எல்லோருடைய கவனத்தையும் கவர வேண்டும் என்ற மறைமுக ஆசையே இதற்கு காரணம். மேலும் நமக்குப் பிடித்தமானவற்றையே மனம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள விரும்புகிறது. அதனாலும் ஒரு சம்பவத்தைப் பற்றி ஞாபகபடுத்தி கூறுவதிலும் தவறுகள் ஏற்படுகிறது.

ஞாபகசக்தி மனதின் ஒரு அம்சம். அது வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கு உதவியாக இருப்பதால் அதன் தன்மையை அறிந்து கொள்வது நல்லது.

# கனவு

"நான் கனவு கண்டால் கண்டது கண்டபடியே நடக்கும்" என்று சிலர் சொல்லிக் கொள்கிறார்கள். "கனவில் காண்பதற்கு நேர்மாறாகத் தான் வாழ்க்கையில் நடக்கும். நஷ்டமடைவது போலல் கனவு கண்டால் லாபம் கிடைக்கும்" என்று வேறு சிலர் சொல்லுகிறார்கள்.

"கனவிற்கு ஒரு பொருளும் கிடையாது, அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதே இல்லை" என்று கூறுபவர்களும் உண்டு.

"கவலையே இல்லாமல் ஆழ்ந்து தூங்குபவன் கனவு காணமாட்டான். கவலை நிறைந்தவன் தான் கனவு காண்கிறான்" என்றும் பலரும் கேட்டுயிருப்போம்.

உறங்கும்போது கனவு காண்பதென்பது குழந்தைகள் முதற்கொண்டு முதியவர்கள் வரை எல்லோருக்கும் பல சமயங்களில் ஏற்படுகிற நிகழ்ச்சி. அந்த கனவிற்கு ஏதாவது காரணம் உண்டா, பொருளுண்டா, அதனால் ஏதாவது பயன் உண்டா என்பவற்றை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

"ஒரு மனிதனுடைய தன்மையை அறிந்து கொள்வதற்கு அவன் காணும் கனவுகள் பெரிதும் துணைபுரிகின்றன" என்று ஆழ்மனதைப் பற்றி விரிவாக ஆராய்ந்த பிராய்டு, ஆட்லர், யுங் என்ற மூவரும் அறுதியிட்டுக் கூறுகிறார்கள். மன நிலையை அறிந்து கொள்வதர்க்குக் கனவு ஒரு வழி என்பதை மற்ற மனத் தத்துவர்களும் ஒத்துக்கொள்கிறார்கள்.

மனக்கோளாறுகளைத் தெரிந்து கொள்வதன் மூலம் பல நோய்களைக் குணப்படுத்த முடியும் என்று பிராய்டு முதலில் கண்டார். அதன் பயனாகவே மனதில் ஆழ்மனம் என்ற ஒரு பகுதி இருக்கிறதென்றும் அவர் உணர்ந்தார். மனநோய்களைப் போக்குவதற்கு ஆழ்மனதில் அழுத்திக் கிடைக்கும் எண்ணங்களையும் ஆசைகளையும் அறிய வேண்டும். அதற்குப் பிராய்டு முதலில் மன வசிய முறையைக் கையாண்டார். அதில் பல குறைபாடுகள் இருப்பதை அனுபவத்தில் தெரிந்து அவர் வேறு முறையொன்றைப் பின்னால் கையாளலானார். தம்மிடம் சிகிச்சைக்கு வருபர்களை ஏதாவது ஒரு சந்தர்பத்தில் நமக்குத் தோன்றும் எண்ணங்களை எல்லாம் தோன்றியவாறே சொல்லும்படி கேட்டார். அவர்கள் காணும் கனவுகளைப் பற்றியும்

வெளிப்படையாக சொல்லும்படிக் கேட்டார். மனதில் எழுகின்ற இழிந்த எண்ணங்களை எல்லோரும் வெளிப்படையாக கூற மாட்டார்கள். மன வசியத்தாலும் அவற்றை அறிந்து கொள்ளுவது அத்தனை எளிதல்ல. ஆனால் கனவுகளின் மூலம் அவற்றை மறைமுகமாகக் கண்டு கொள்ளலாம் என்று பிரைடுக்குப் புலப்பட்டது. அவர்தாம் முதலில் கனவுகளைப் பாகுபடுத்தி அவற்றைக் கொண்டு மனநிலையைக் காண முயன்றவர்.

தூங்கி எழுந்தவுடன் பல கனவுகள் மறந்துபோய் விடுகின்றன. சிலவற்றை நாம் நினைவிர்க்குக் கொண்டு வர முடியுமானாலும் அவை தொடர்பில்லாத விசித்திரச் செயல்கள் நிறைந்திருக்கின்றன. அதனால் தான் கனவுக்குப் பொருளில்லை என பலர் கருதுகின்றனர். கனவில் நிகழ்வனவற்றை நிகழ்ந்தவாறே உண்மையென எடுத்துக் கொள்ளக் கூடாது. பல கனவு நிகழ்ச்சிகளுக்குக் குறிப்பிட்ட வேறு பொருள்கள் உண்டு. அவற்றை அறிந்து கொண்டால் தான் கனவுகளைக் கொண்டு ஒருவனுடைய மனநிலையை நன்கு அறிந்துகொள்ள முடியும்.

கனவுக்குப் பொருள் இருப்பதாக நினைப்பது குருட்டு நம்பிக்கை என்று சிலர் கூறலாம். அறிவு வளர்ச்சி பெறாத மக்கள் தான் கனவை நம்புவார்கள் என்றும் அவர்கள் பேசலாம். ஆனால் பாமரர்கள் கனவை நோக்கும் விதம் வேறு. மனத் தத்துவவாதி அதை நோக்கும் விதம் வேறு. "விஞ்ஞானப் பார்வையோடு மற்ற விஷயங்களை ஆராய்வதைப் போலவே கனவையும் ஆராயலாம். கனவு என்பது ஒரு அனுபவ உண்மை. ரசாயனத்திலும், உடலியலிலும் உண்மைகளை ஆராய்வது போல அதையும் சரிவர ஆராயலாம்" என்று ஜி.எச் கிரீன் எழுதுகிறார். ஆதலால் கனவைப்பற்றி மனத்தத்துவ முறையில் சோதனை செய்வது அறிவுக்குப் பொருந்தியதொன்றே. அவ்வாறு சோதனை செய்து பிராய்டும் அவரைப் பின்பற்றுபவரும் பல மன நோய்களைப் போக்கி இருக்கிறார்கள்.

மனதில் உள்ள எண்ணங்களை எல்லாம் மறைக்காமல் கூறுவதைச் சாதரணமாக மக்கள் உடைத்துச் சொல்லுவதென்று கூறுவார்கள். நான் உடைத்துப் பேசுகிறேன் என்றால் எதையும் ஒளிக்காமல் சொல்லுவதாக அர்த்தம். அந்த மாதிரி ஏதாவது ஒரு சந்தர்பத்திலே எழுக்கின்ற எண்ணங்களை எல்லாம் உடைத்துக் கூறினால் அவற்றின் மூலம் கனவுகளின் உண்மைப்போருளையும் கனவு காண்பவனின் மன நிலைமையையும் அறிந்து கொள்ள முடியும். எல்லோராலும் அவ்வாறு அறிந்து கொள்ள முடியும் என்று

நான் கூறவில்லை. அதற்கு மனத்தத்துவ அறிவு நிறைய வேண்டும். அனுபவமும் வேண்டும். அனுபவம் வாய்ந்த ஒருவனுக்கு எந்த சந்தர்பத்தை உண்டாக்கினால் அதன் விளைவாக எழும் என்னங்களிக் கொண்டு மன நிலையைக் காண முடியும் என்பது தெரியும். உடைத்துப் பேசுவதும் கனவும் ஒன்றுக்கொன்று உதவியாக நின்று ஒருவனுடைய மன நிலையை வெளிபடுத்துகின்றன. சொல்லுவதில் சிலவற்றை மறைந்திருந்தாலும் கனவு அதைக் குறிப்பாக காட்டிவிடும்.

சிக்கலில்லாத சாதரணமான கனவுகள் இருக்கின்றன. அவற்றின் குறிப்பைப் கண்டுகொள்வது அனைவருக்கும் எளிது. நனவில் பூர்த்தியாகாத பல ஆசைகள் கனவிலே பூர்த்தியாவது உண்டு. காதல் வாயப்பட்ட இளைஞன் தன காதலியோடு கூடி இருப்பதாகக் கனவு காண்கிறான். வறுமையால் வாடி இருப்பவன் கனவிலே குபேரனைப் போல வாழுகிறான். அழகான பொம்மை வேண்டுமென விரும்பிய குழந்த அதைப் பெற்று மகிழ்வதாக கனவு காண்கிறது.

வீட்டிலே வேலை செய்வதற்காக ஒன்பது வயதுப் பெண் ஒருத்தி இருந்தாள். அவள் ஒரு நாள் இரவில் எழுந்து உட்கார்ந்து கொண்டு, “என் அக்காள் வந்து வெளியே நிற்கிறாள். கதவை திறந்துவிடுங்கள்” என்று கூறினாள். ஆனால் உண்மையில் யாரும் வர வில்லை. அவள் கண்டது கனவு. தன் அக்காளைப் பிரிந்து வந்து பல நாட்களாகி விட்டபடியால் அவளைப் பார்க்கவேண்டும் என்கிற ஆசையே இவ்வாறு கனவில் நிறைவேறி இருக்கிறது.

சாதரணமாகக் கனவு காணும்போது அதில் நடக்கும் சம்பவங்களை எல்லாம் உண்மை போலவே உணர்கிறோம். கனவு காண்பவன் சந்தறப்பத்திர்க்கேற்ப வாய்விட்டுச் சிரிப்பதும் அழுவது உண்டு. குழந்தைகளிடம் இதை அதிகமாக காணலாம்.

சரோஜாவுக்கு வயது நான்கு. அவள் ஒரு இரவு தூங்கி கொண்டு இருக்கும் போது அழுது கொண்டு இருந்தாள். “ ஏன் இப்படி அழுகிறாய்” என்று கேட்டதற்கு அவள் எழுந்து, “அக்கா என் புது பொம்மையை எடுத்துக் கொண்டாள்” என்று முறையிட்டாள். உண்மையில் யாரும் அவளுடைய பொம்மையை எடுத்துக்கொள்ளவில்லை. எல்லோரும் தூங்கிக் கொண்டு இருந்தார்கள். தன் பொம்மையை அக்காள் பிடுங்குவது போல கனவு கண்டு

இருந்திருக்கிறாள். முதல் நாளில் நடந்த செயலே அவள் கனவில் பிரதிபலித்து இருக்கிறது.

எல்லாக் கனவுகளும் ஆசை நிறைவேற்றதிற்க்காக உண்டாவதில்லை. இதில் தான் பிராய்டுக்கும் மற்றவர்களுக்கும் அபிப்பிராய வேறுபாடு உண்டாகிறது. எல்லாக் கனவுகளும் ஆசை நிறைவேற்றங்களே என்று பிராய்டு சாதிக்கிறார். மற்றவர்கள் அவ்வாறு கருதுவதில்லை. மேலே கூறிய குழந்தையின் கனவு ஆசை நிறைவேற்றமல்ல. அதன் உள்ளத்தில் இருந்த பயத்தின் தோற்றமே அது.

முதல் நாள் நடந்த சம்பவங்கள் பல தடவைகளில் கனவில் தோன்றுகின்றன. ஒரு நாள் ஒரு அழகான ஒன்றைப் பற்றி பேசிக் கொண்டு இருக்கிறோம் என்று வைத்துகொள்வோம். அதை ஒரு பதினெட்டு வயது இளைஞன் ஒருவனுக்குப் புத்தகத்திலே மிகுந்த பற்றுண்டு. அவன் அந்த நூலை ஒரு கடையில் காண்பது போலவும் அதை வாங்குவது போலவும் அன்று இரவே கனவு கண்டதாக கூறுவதை கேட்கலாம். பெரும்பான்மையான கனவுகள் அண்மையில் உண்டான மனப் போராட்டத்தையே அடிப்படையாகக் கொண்டு இருக்கின்றன என்று ரிவர்ஸ் (W.H.R.Revers) என்பவர் கூறிஇருக்கிறார். பல ஆண்டுகளுக்கு முன்பு நடந்த சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு பல கனவுகள் வருவதும் உண்டு. எனக்கு எட்டு வயதிருக்கும். என்னை வீட ஒருவயது இளைஞனான என் தோழன் ஒருவனுடன் வீதியில் விளையாடிக்கொண்டு இருந்தேன். இரண்டு மாடுகள் ஒன்றையொன்று எதிர்த்து சீறிக்கொண்டு ஓடி வந்தது. நாங்கள் விளையாட்டில் ஈடுபட்டு இருந்ததால் அவற்றைக் கவனிக்கவில்லை. ஒரு மாடு மற்றொன்றின் மேல் திடிரென்று பாயவே அது சமாளிக்க முடியாமல் பின்வாங்கியது. இரு மாடுகளும் வந்த வேகத்தில் என் தோழனை காலால் மிதித்துக் கொண்டு சென்று விட்டன. அவன் படுகாயமுற்றுப் சுய நினைவின்றி இருந்தான். அருகிலே யாருமில்லை. நான் பயந்து நடுங்கி அசைவற்று நின்று விட்டேன். அது முதற்கொண்டு அடிக்கடி மாடு வருவது போலவும் கனவு காண்கிறேன். இந்த மாதிரி திரும்பித் திரும்பி வரும் கனவுகளுக்குக் கூட அவற்றிற்குக் காரணமாக எதாவது நிகழ்ச்சிகள் சமீபத்தில் நடந்திருக்கக் கூடும். வழியிலே ஒரு மாட்டை பார்த்திருக்கலாம். அது பழைய உணர்ச்சிகளை மேலுக்குக் கொண்டு வந்திருக்கும்.

மேலே எடுத்துக் காட்டப்பட்ட கனவுகளில் சிக்கல் ஒன்றும் இல்லை என்பதால் அவற்றை எளிதாக விளக்கி விடலாம். ஆனால் பொதுவாகப் பல கனவுகள் அவ்வாறு இருப்பதில்லை. அவை நம்மை திகைக்க வைக்கும் படியாக இருக்கின்றன. சம்பவங்களில் ஒன்றுக்கொன்று தொடர்பு இருப்பதில்லை. விந்தையான காட்சிகளும், ஜீவன்களும் காணப்படுகின்றன. நடக்க முடியாத சம்பவங்களும் நடக்கின்றன. இவற்றை எல்லாம் பொருள் கண்டுபிடிப்பது சுலபம் அல்ல. ஏன் அவ்வாறு வினோதக் கனவுகள் ஏற்படுகின்றது என்பதையும் அவற்றின் குறிப்பு என்னவென்பதையும், அவற்றால் மன நிலையை எவ்வாறு அறிந்து கொள்ள இயலும் என்பதையும் அடுத்த பகுதியில் ஆராய்வோம்.

# கனவும் மனமும்

கனவைப் பற்றி மூன்று விதமான அபிப்பிராயங்கள் இருக்கின்றன. ஒன்று பாமர மக்களுடையது. அவர்களுக்குக் கனவிலே அறிவுக்கு பொருந்தாத ஆழ்ந்த நம்பிக்கையுண்டு. தெய்வ வாக்காகவே அதை எடுத்துக் கொள்வார்கள். மதி நுட்பம் வாய்ந்தவர்கள் கூடச் சில சமயங்களில் கனவை அனுசரித்துக் காரியம் செய்வார்கள். கனவு ஒரு சில சமயங்களில் மெய்யாவதும் உண்டு. அந்த அனுபவ உண்மையை ஒட்டித்தான் நந்தனாரின் கனவும் திரிசடையின் கனவும் தீட்டப்பட்டு இருக்கின்றன. கனவு பளித்ததாகச் சிலர் கூறுவதை கேட்டு இருக்கிறோம். இந்த நம்பிக்கையே சொப்பன நூல்கள் எழக்காரணம். அவை எவ்வுளவு தூரம் விஞ்ஞான முறை ஆராய்ச்சிக்குப் பொருந்தும் என்பது கவனிக்கத்தக்கது. கனவைப்பற்றி மற்றொரு அபிப்பிராயம் விஞ்ஞானிகள் ஒரு சிலர் இப்படி கொண்டு இருப்பது உண்டு. கனவுகள் உண்டாவதற்கு உடல் நிலையே காரணம் என்று கருதுகிறார்கள். அதாவது அஜீரணம், மலச்சிக்கல் போன்ற கோளாறுகள் மூளையைப் பாதித்து உறக்கத்திலே கனவுகளை உண்டாக்குகின்றன என்றும், உறங்கிக் கொண்டு இருக்கும் ஒருவன் மேல் ஒரு சில சொட்டு தண்ணீர் விட்டால் அவன் மழை பெய்வது போல கனவு காண்பான் என்றும் கூறுகிறார்கள். இந்த மாதிரி சோதனைகள் செய்து கனவுகளை உண்டாக்கியும் இருக்கிறார்கள். நான் பல சிறுவர்களுடைய கனவுகளை ஆராய்ந்து இருக்கிறேன். உறங்கும் போது சிறுநீர் பை நிறைந்து விட்டால் கனவு ஏற்பட்டு, முடிவில் அதன் உபாதையை தீர்த்துக்கொள்வது போன்ற சம்பவம் ஏற்படுவதாகப் பலர் உரைக்கிறார்கள். அதன் காரணமாக உறக்கத்தில் படுக்கையிலேயே சிறுநீர் கழிக்கிறார்கள். உறக்கத்தில் சிறுநீர் கழிக்க வேறு சில காரணங்களும் உண்டு.

மூன்றாவது அபிப்பிராயம் மனத்தத்துவத்தை ஆதாரமாக கொண்டது. மன நிலையே கனவுக்குக் காரணம் என்றும், உடல் கோளாறால் கனவு ஆரம்பமானாலும், அதில் தோன்றுகின்ற நிகழ்ச்சிகள் மன நிலையைப் பொருத்தவையே என்றும் ஆராய்ச்சியாளர்கள் சொல்லுகிறார்கள். ஒரு துளி நீரைத் தூங்குகிறவன்மேல் தெளித்தால் மழை பெய்வது போலக் கனவு உண்டாகலாம். ஆனால் பலரைக் கொண்டு இந்த சோதனையைச் செய்து பார்க்கும்போது எல்லோரும் ஒரேவிதமாகக் கனவு காணமாட்டார்கள் என்பது

தெரியவரும். சிறு தூறல் விழுவது போல ஒருவன் கனவு காணலாம். பெருமழை பெய்வது போல மற்றொருவன் காணலாம். இடியும் மின்னலும் சேர்ந்து இருப்பதாக வேரு ஒருவன் காணலாம். மேலும் மழை பெய்வதுடன் வேறு பல சம்பவங்களையும் மற்றவர்கள் காணலாம். அவைகள் ஒன்றிற்கொன்று மாறுபட்டு இருக்கும். அவை எல்லாம் மன நிலையைப் பொறுத்தது என்று மனத்தத்துவர்கள் வியாக்கியானம் செய்கிறார்கள். சிக்மண்ட் பிராய்டு தான் முதல் முதலில் கனவுகளை பாகுபடுத்தி அவற்றின் பொருளை விஞ்ஞான முறையில் அறிய முன்றவர் என்பதை முன்பே கண்டோம்.

எல்லாக் கனவுகளும் ஆசைகளை நிறைவேற்றுவதற்காக ஏற்பட்டவை என்பது பிராய்டின் சித்தாந்தம். 'நனவில் கைகூடாத ஆசைகள் கனவில் கைகூடுவதால் மனதிற்கு ஆறுதல் கிடைக்கிறது. நல்ல உறக்கமும் ஓய்வும் உண்டாகின்றன. ஆதலால் கனவே உறக்கத்தைப் பாதுகாக்கிறது என்று அவர் கருதுகிறார். "உறக்கத்தைக் கனவு பாதிப்பதில்லை, அதைப் பாதிக்கும்படியான மனச் சுமைகளை நீக்கி கனவு ஒரு நல்ல ஓய்வை கொடுக்க முயல்கிறது".

"மறைந்து கிடைக்கும் ஆசைகள் கனவில் பூர்த்தி அடைவதால் மனதில் அமைதி ஏற்படுகிறது. ஆனால் பிராய்டு கருதுவது போல எல்லாக் கனவுகளும் ஆசை நிறைவேற்றத்திற்காக உண்டாகின்றன என்றால் ஆசை எனபதர்க்கு மிக விரிந்த பொருள் கொள்ள வேண்டி இருக்கும். அவ்வாறு வலிந்து பொருள் கொள்வது சரியல்ல" என்று பல மனத்தத்துவ வாதிகள் எண்ணுகிறார்கள்.

பொதுவாகக் கனவுகளை ஆரய்வது மிக்க முக்கியமான காரியமாகும். ஒன்பது முதல் பன்னிரண்டு வரை வயதுள்ள சிறுவர்கள் கண்ட சிக்கலில்லாத சில கனவுகளைக் கீழே தருகிறேன்.

## கனவு வகை :1

"நான் ஒரு பெரிய அரண்மனைக்குள் நுழைந்து விட்டேன். அங்கு லட்டு, ஜிலேபி எல்லாம் இருந்தன. நான் அவற்றை என் வாயில் எடுத்துப் போட்டுக் கொண்டேன். அப்பொழுது ஒரு பெரிய தடி மனிதன் வந்து என்னை அடித்தான். நான் அழுதுகொண்டு விழித்துக் கொண்டேன்"

## கனவு வகை :2

“என் தகப்பனார் நூறு ரூபாய் கொடுத்து என்னை ஊருக்குப் போகச் சொன்னார். நான் போய்க் கொண்டு இருந்தேன். அப்பொழுது ஓர் ஆகாய விமானம் வந்தது. நான் அதில் ஏறிக்கொண்டேன். அதில் எல்லோரும் வெள்ளைகாரர்கள். கொஞ்சதூரம் போனதும் விமானம் கெட்டுவிட்டது. உடனே பாரஷுட் என்னும் குடையை கொடுத்தார்கள். நான் அதை பிடித்து இறங்கினேன். ஒரு குளத்திற்குள் போய் விழுந்தேன். உடனே விழித்துக் கொண்டேன்”.

## கனவு வகை :3

“நான் பழனிக்கு ரெயிலில் போவதாகக் கனவு கண்டேன். ஒரு ஸ்டேஷனில் இறங்கினேன். அப்பொழுது டிக்கெட் பரிசோதகர் வந்து டிக்கெட் கேட்டார். நான் வாங்கவில்லை என்று கத்தினேன். “ஏண்டா சத்தம் போடுகிறாய்” என்று அப்பா கேட்டார். நான் விழித்துப் பார்த்தேன். அபொழுது படுக்கையில் படுத்துக் கொண்டிருந்தேன்”.

வெவ்வேறு அளவில் ஆசை நிறைவேற்றத்தை இந்த கனவுகளில் காணலாம். அதிகாரம் செய்வதாக கனவில் ஒருவர் தோன்றுவதாக சொன்னால் பெரும்பாலும் அவர் தன் தந்தையை குறிப்பிடுவார். உயரத்தில் இருந்து விழுவது போன்று கனவுகள் மனித பரினமத்திலே அவன் விலங்கு நிலையில் இருந்த காலத்தில் ஏற்பட்ட அனுபவத்தைக் குறிப்பதாக சிலர் கூறுகிறார்கள். மரங்களில் வசித்த அந்த விலங்குகள் தூக்கத்தில் தவறிக் கீழே விழுந்ததால் உண்டான ஆழ்ந்த உள்ளக் கிளர்ச்சி நிரந்தரமாக மனதில் பதிந்துவிட்டதாகவும், அது வழிவழியாக வந்து இன்னும் உறக்கத்திலே கனவாகத் தோன்றுகின்றது என்றும் அவர்கள் விளக்குகிறார்கள். உறங்கும்போது கால்களை நீட்டுவதாலோ அல்லது வேறு உடல் அசைவுகள் எற்படுவதாலோ கீழே விழுவது போன்ற கனவு பிறக்கலாம் என்று உடலியலாளர்கள் கூறுகிறார்கள். நல்ல நடத்தையில் இருந்து தவறி நடக்க ஏற்பட்டுள்ள விருப்பத்தை அந்த கனவு காண்பிக்கிறது என மனப் பகுப்பியல்லார்கள் எண்ணுகிறார்கள்.

கனவில் தோன்றும் சில குறிப்பிட்ட நிகழ்ச்சிகளைப் பற்றி பொதுவான விளக்கம் சொல்லாம் என்றாலும் அவ்வாறு விளக்கம் செய்வதற்கு யாதொரு திட்டமான விதியோ சூத்திரமோ கிடையாது. கனவு காண்பவனுடைய

தனிப்பட்ட மனநிலைக்கு ஏற்றவாறு அவற்றிற்குப் பொருள் காண வேண்டும். பல கனவுகளை ஆராயும்போது அவை விநோதமாகவும், தொடர்பின்றியும், சிக்கல்கள் மிகுந்து இருப்பதும் தெரிய வரும். அவற்றையெல்லாம் புரிந்து கொள்வதற்கு பிராய்டு ஒரு புதிய முறையைக் கையாண்டார். அதைத் தான் எண்ணச் சேர்க்கைமுறை (Free association Method) என்கிறார்கள். ஒரு கனவை பல பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு, ஒவ்வொரு பகுதியையும் அந்த கனவை கண்டவரிடம் கூறும்போது அவன் மனதில் ஏற்படும் எண்ணங்களை எல்லாம் ஒளிக்காமல் சொல்லும்படிக் கேட்க வேண்டும். அப்படிக் கேட்க்கும் சமயத்தில் அவனைத் தனியாக ஒரு இருண்ட அறையில் படுத்து இருக்கும்படி செய்ய வேண்டும். அவன் கூருகின்றவைகளைக் கனவுடன் சேர்த்து ஆராய்ந்தால் அவனுடைய மன நிலையையும் அதில் மறைந்து கிடைக்கும் ஆசைகளையும் அறிய முடியும் என்று பிராய்டு சொல்லுகிறார், அவ்வாறு ஆராய்ந்த கனவைப் பற்றி அடுத்த பகுதியில் காண்போம்.

# கனவின் பொருள்

பல கனவுகள் சிக்கல் நிறைந்து இருக்கின்றன. அவற்றில் தோன்றும் நிகழ்ச்சிகள் மேலாகப் பார்க்கும்போது அர்த்தம் அற்றவையாக இருக்கின்றன. உதாரணமாக ஒரு கனவை எடுத்துக்கொள்வோம்.

"ஏதோ ஒரு பெரிய கோவில். அங்கே நானும் என் நண்பர்கள் சி.வே.மா. ஆகிய மூவரும் சேர்ந்து ஒருவனைக் கொலை செய்தோம். அவனுடைய மூக்கை மாத்திரம் அறுத்துச் சந்தனத்தில் வைத்துச் சாமிக்கு வைத்தோம். பிரேதம் வெளியே கிடந்தது. சி. தான் மூக்கை அறுத்தவர். கடவுளைத் தொழுவதர்க்கப் பலர் ஒரு காரில் வந்தனர். உடனே நான் பிரேதத்தைத் தூக்கிக் கோபுரத்தின் மேல் வீசினேன். இதை எனது ஆசிரியர் ஒருவர் பார்த்துக் கொண்டார்.

"நான் ஓடி வந்து விட்டேன். வழியில் என் நண்பன் வீ. யை சந்தித்து வேறு ஒருவனிடம் சைக்கிள் வாங்கி இருவரும் ஏறிக்கொண்டு ஊருக்குச் சென்றோம். வழியில் சி. தம் அண்ணனிடம் சாதாரணமாகப் பேசிக் கொண்டு வந்து கொண்டு இருந்தார். எனக்கு ஆச்சர்யமாக இருந்தது. கொலை செய்துவிட்டு இவர் இவ்வுளவு தாரளமாக வெளியில் நடமாடுகிறாரே என்று வியந்தேன்.

"நாங்கள் ஒரு சத்திரத்தில் புகுந்து கொண்டு இருந்தோம். ஆனால் சி. வேறு சில நண்பர்களுடன் வழியில் சென்று கொண்டு இருந்தார்".

கனவுகள் பல இவ்வாறு இருப்பினும் பிராய்டு கூறுவது போல் அவற்றை ஆராய்ந்து பொருள் கண்டால் மன நிலையையும் கோளாறுகளையும் அறிந்து கொள்ள முடியும். கனவை ஆராய்வதற்கு எண்ணச் சேர்க்கை முறையை கையாளுகிறார்கள்.

அந்த முறையைப் பின்பற்றி ஆராய்ந்த ஒரு கனவையும் அதன் பயனையும் சோதனை செய்தது போலவே கீழே ஒரு உதாரணத்தை பார்ப்போம்.

ப. என்ற நண்பர் கண்ட கனவு, "உலாவச் சென்று கொண்டு இருக்கிறேன். ஓரிடத்தில் ஒரு பாம்பு புற்று இருந்தது. ஓணான் ஒன்று பாம்பை பிடித்துத் தின்ன நினைத்து அந்தப் புற்றுக்குள் நுழைந்தது. நான் சற்றுத் தூரம்

போய்த் திரும்பி அதே வழியாக வந்தேன். உள்ளே சென்ற ஓணான் வேகமாக வெளியே வந்து குதித்தது. ஒரு பாம்பு அதைத் துரத்திக் கொண்டு வந்தது. என்னைத் தாண்டித் துரத்திக் கொண்டே போயிற்று. ஓணானைப் பாம்பு தன் வாயில் கவ்விக் கொண்டது.

முதல் சோதனை: இரவு 7 ½ மணிக்கு எண்ணச் சேர்க்கை முறையில் சோதனை ஆரம்பிக்கிறது. எங்கும் நிசப்தம். அறைக்குள்ளே மங்கிய வெளிச்சம். நண்பர் ஒரு கட்டிலிலே கை கால்களை நீட்டிக் கொண்டு படுத்திருக்கிறார். நான் தலைக்குப் பக்கத்தில் பின் புறமாக அமர்ந்திருக்கிறேன்.

"இப்பொழுது நீங்கள் கண்ட கனவில் சில அம்சங்களைப் பற்றித் தனித் தனியாக உங்களிடம் சொல்லப் போகிறேன். ஒவ்வொன்றையும் கேட்டதும் அதைப் பற்றியே சிந்திக்க வேண்டும். அதன் காரணமாக மனதில் என்ன தோன்றுகின்றனவோ அவற்றை எல்லாம் அப்படியே சொல்லிக் கொண்டு இருங்கள். எதையும் மறைக்கக் கூடாது. உம்முடைய அறிவைக் கொண்டு எதையும் ஆராய்ந்து பார்க்க இயலாது. தோன்றியது தோன்றியபடியே கூற வேண்டும். எண்ணங்கள் மிக இழிந்தவையாக இருக்கும் போதும் அதை மறைக்க முயலக் கூடாது. எல்லாவற்றையும் தாரளமாக சொல்ல வேண்டும். அவற்றைக் கொண்டு தான் உண்மையை அறிய முடியும்." எவ்வாறு கூறிவிட்டுக் கனவின் அம்சங்களை ஒவ்வொன்றாக கூறினேன். அவற்றை கேட்டு ப. சொன்ன எண்ணங்களை ஆராய்வோம்.

## 1.பாம்புப் புற்று

" எங்கும் பாம்புப் புற்றுகள். அவற்றைப் பார்த்துக்கொண்டே நடக்கிறேன். – சிறு வயதில் பாம்பு புற்றுக்குப் பூசை செய்வதைப் பார்த்தல்- இரவில் நடக்கும் போது பாம்பு இருக்குமோ என்ற பயம் – வழியில் ஒரு பாம்பு சட்டை –பாம்பு இருக்குமோ எனப் பயம் – ஒரு நாள் இரவிலே வீட்டிற்க்குத் தனியாக வருதல். பாம்பு வீட்டிர்க்குள்ளே இருந்தால், இருட்டிலே என்ன செய்வது? தீக்குச்சியை உரைத்துக் கொண்டே உள்ளே செல்ல வேண்டும். முன்பு குமாஸ்தாவாக இருந்த போது எனது அறையிலே ஒரு நாள் சரசரவென்று சப்தம் – திரும்பி வந்து பார்த்தபோது பாம்பு – மற்றவர்கள்

வந்து அதை அடிகிரர்கள். நிலாவைப் பாம்பு விழுங்குவதாகச் சிறு வயதில் கேட்ட கதை.

## 2.ஓணான் பாம்புப் புற்றில் நுழைதல்

ஓணான் அடிக்கடி என் கண்ணில் படுகிறது – சிறு வயதில் எனது நண்பர்கள் இருவருடன் விளையாடுதல் போன்ற கனவு - அவர்கள் உண்டி வில்லால் ஓனானை அடித்தல் – ஓணானை கண்டு பயம் – அடிக்க வேண்டாம் என்று நான் கண்டிப்பதுண்டு – ஓணானை பார்த்தால் உடம்பு சிலிர்ப்பதுண்டு – அதன் உறுவத்தில் ஒரு அறுவருப்பு – அது கடித்தால் இறந்து விடுவார்கள் என்று கேள்விப் பட்டு இருக்கிறேன். நான் குமாஸ்தாவாக இருந்த போது ஒரு நாள் என் அறையில் ஒரு ஓணான் புகுந்து கொண்டது – வெளியே துரத்த முடியவில்லை."

## 3. பாம்பு ஓணானை துரத்துதல்

"இரவில் செல்லும் போது செடிகளை கண்டால் எட்டத் தள்ளிச் செல்வேன் – கனவு கண்ட மறுநாள் ஒரு ஓணான் என் பின்னால் விழுந்து ஓடிற்று. அது மேலே விழுந்திருந்தால் கடிக்குமோ எண்று சந்தேகம் – பாம்பு வளைந்து போகும் – நேராக ஓடினால் தப்பித்துக் கொள்ளலாம்".

## 4.பாம்பு ஓணானை வாயில் கவ்வுதல்

யாரோ இருவர் ஒரு மலைப் பாம்பை ஒரு கம்பில் கட்டித் தூக்கி வந்ததைச் சிறு வயதில் பார்த்த ஞாபகம் – மலை ஏறும் போது பாம்பு வருமோ என்ற பயம் – சிறு வயதில் திண்ணையில் படுத்து இருந்த போது கூரையில் ஏதோ ஒன்று அசைவதைக் கண்டு தாயைக் கூப்பிடுதல் – பார்த்தால் அது பாம்பு – அதை அடித்தார்கள் – மாலைப் பாம்பு ஆடுமாடுகளை விழுங்குதல் – பாம்பின் வாலைப் பிடித்துச் சுற்றி அடித்தால் அது செத்துவிடும். வேறு ஊர் சென்று திரும்பும் போது இருட்டி விட்டது. வழியில் பாம்பு இருக்குமோ என்ற பயம். பாம்பு வழியில் படுத்து இருந்தது. காலடி சத்தம் கெட்டு அது போய் விட்டது. புது வீட்டில் ஏழு அல்லது எட்டு பாம்பின் தோல் இருந்ததை

கண்டேன் – பாம்பும் வந்தால் என்ன செய்வது என்று பயம். சிறு வயதில் தாயுடன் படுத்து இருக்கும் போது படுக்கை அடியில் ஒரு பாம்பு இருந்தது. அதைக் கண்டு தாய் அலறி நடுங்கினார் ".

எனது நண்பருக்கு இப்பொழுது கல்யாணமாகி இருக்கிறது. புது வீட்டில் தனிக் குடித்தனம் நடத்துகிறார். அந்த வீட்டிற்க்கு எதிராக ஒரு கழனி இருக்கிறது. பாம்பு அங்கே இருக்கலாமெனச் சந்தேகம். மேலும் அவர் சில சமயங்களில் இருட்டிய பிறகு காட்டுப் பாதை வழியாக வீட்டிற்கு வர வேண்டி இருக்கிறது. அதனால் பாம்பைப் பற்றிய பயம் உள்ளத்திலே மேலே எழுந்திருக்கிறது. சிறு வயதிலே வீட்டுக் கூரையின் மீதும், படுக்கைக்கு கீழும் அறைக்குள்ளே பாம்பைக் கண்டதும் பாம்பை பற்றிய பயத்தை மறைமனத்தில் உண்டாக்கி இருக்கின்றன. இன்று பாம்பைப் பற்றிய எண்ணம் ஏற்படவே பழைய உணர்ச்சியானது மனதில் தோன்றி இருக்கிறது.

மேலும் தம் மனதிலே உண்டாகும் பாம்பைப் பற்றிய பயத்திற்காக அவர் தம்மைத் தாமே வெறுத்துக் கொள்ளுகிறார்கள். அதனால் சிறு வயதில் இருந்து அருவருத்து வந்த ஓணான் போல் தம்மையே கனவில் காண்கிறார். பாம்பை அடித்து வெற்றிக்கொள்ள வேண்டும் என்கிற ஆசையும் அதில் காண்கிறது. இந்த விளக்கத்தைக் கூறியபோது நண்பர் அதை பெரும்பாலும் ஒப்புக் கொண்டார். வேறு ஒரு ஊரில் இருந்த களத்தில் பாம்பு கனவே கண்டதில்லை என்று கூறினார். சிறு வயதில் ஏற்பட்ட அனுபவம் இதுவரை ஞாபகத்திற்கு வந்ததில்லை என்றும் சொல்லி அதிசயப்பட்டார்.

எண்ணச் சேர்க்கை முறையைக் கையாண்டு நல்ல பலன் கண்டவர் சிக்மண்ட் பிராய்டு. ஆசை நிறைவேறுவதர்க்காகவே கனவுகள் எழுகின்றன என்று அவர் கூறுகிறார். அவருடைய ஆராய்ச்சியைப் பெரிதும் போற்றினாலும் ஆட்லரும் யுங்கும் அவர் கூறுவதைப் பூரணமாக ஏற்றுக் கொள்வதில்லை. "கனவு என்ற வாயிலின் வழியாக மனக் கோட்டைக்குள் நடக்கும் நிகழ்ச்சிகளின் இலேசான காட்சி நமக்குக் கிடைக்கிறது" என்று ஆட்லர் எழுதுகிறார். "ஒருவனுடைய வாழ்க்கைப் பிரச்சனையையே கனவு பிரதிபலிக்கிறது" என்பது அவர் கருத்து.

உயர்வடைய வேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன் வாழ்க்கைப் போராட்டம் நிகழ்வதாக ஆட்லர் நம்புகிறார். 'கனவும் அந்த நோக்கத்தை அடையும் முயற்சியைச் சித்தரிக்கிறது.

யுங் என்பவர் மறை மனத்திற்கு மற்றவர்களை வீட மிக முக்கிய ஸ்தானம் கொடுப்பவர். மனிதவர்க்கம் அடைந்துள்ள ஆழ்ந்த உள்ளக் கிளர்ச்சிகளெல்லாம் மறை மனதில் பதிந்து இருக்கின்றன என்பதும் அந்த மறை மனதில் இருந்த வெளிமனம் வளர்கிறதென்பதும் அவர் கருத்து. ஆகவே அவர், "வாழ்க்கையில் ஏற்படும் தடைகள் குறைபாடுகள் முதலியவற்றை ஆழ் மனம் கனவிலே ஈடு செய்ய முயல்கிறது. அவ்வாறு ஈடு செய்வதற்காக உண்டாகும் நிகழ்ச்சிகள் பெரும்பாலும் புதிர்போல இருக்கின்றன. அவற்றைச் சந்தர்பத்திற்கு ஏற்றவாறு ஆரிந்து அறிந்து கொள்ள வேண்டும்.

பிராய்டு, ஆட்லர், யுங் ஆகிய மூவருடைய கருத்துக்களையும் சேர்த்துப் பார்க்கும்போது அநேகமாகக் கனவைப் பற்றி ஒரு பொதுவான அபிப்பிராயம் நமக்குக் கிடைக்கும்.

பல கனவுகள் தொடர்பில்லாமல் தாறுமாறாகவும், விநோதமாகவும் இருப்பதால் கனவிற்கே பொருளில்லை என்று நாம் தள்ளிவிடக் கூடாது. "கனவு நம்முடைய வாழ்க்கையோடு நெருங்கிய சம்பந்தமுடையது. அது குறிப்பாக மன நிலையைக் காட்டுவதென்பதை வெகு சுலபமாக நிருபித்துவிடலாம். மறைவாக மனத்துள்ளே வேலை செய்யும் எண்ணங்களை அது காண்பிக்கிறது". என்று மெக்டூகல் என்ற மனத்தத்துவர் எழுதுகிறார்.

கனவுகள் நிகழ்கின்ற காலத்திலேயும் மனம் வேலை செய்து கொண்டிருக்கிறது. ஆனால் விழிப்பு நிலையில் இருப்பது போல் அது அவ்வுளவு கூர்மையாகவும், நுட்பமாகவும் வேலை செய்வதில்லை. தர்க்கரீதியாகவும் நுட்பமாகவும் அப்பொழுது எண்ணங்கள் தோன்றுவதில்லை. இவ்வாறு மனம் தனது முழுச் சக்தியுடன் வேலை செய்யாததால் அந்த சமயத்திலே மறைமனத்தில் அழுத்திக் கிடைக்கும் எண்ணங்களும் ஆசைகளும் கணவகா வெளிப்படுகின்றன. ஆதலால் தான் கனவுகளும் தாறுமாறாக இருக்கின்றன.

வாழ்க்கையில் பூர்த்தியடையாத பல ஆசைகள் கனவில் பூர்த்தியடைகின்றன என்று கண்டோம். கனவிலே ஒரு சில சமயங்களில் எதிர்காலத்தில் நடைபெறப் போவதும் தோன்றுவது உண்டு. இறந்த கால அனுபவங்களைக் கொண்டு இருப்பதோடு ஓரளவிற்கு எதிர்கால அனுபவங்களின் படியுமே எதிர்காலத்தில் செயல்களின் போக்கு அமைக்கின்றன. ஆதலால் அவை கனவில் எப்பொழுதாவது தோன்றுவதில்

அற்புதம் ஒன்றுமில்லை. இதைக் கொண்டு எல்லாக் கனவுகளும் மெய்யாகுமாறு எண்ணிவிடக் கூடாது. கனவைப் பற்றிய உண்மையை அறிந்த பின் நாம் அவ்வாறு தவறாக எண்ணமாட்டோம்.

ஒவ்வொரு கனவையும் ஆராய்ந்து அதன் பொருளை அறியலாம். அதற்கு முக்கியமாகக் கனவு காண்பவனுடைய ஒத்துழைப்பு வேண்டும். அந்தரங்கமான விஷயங்களையும் மனத்தில் உதிக்கின்ற எண்ணங்களையும் மறைக்காமல் கூற அவன் உடன் பட வேண்டும். இல்லாவிட்டால் உண்மையை அறிவது அநேகமாக முடியாது. அவ்வாறு வெளிப்படையாகக் கூறிய காலத்திலும் சில சமயங்களில் கனவின் பொருளை அறிய முடியாமல் போகலாம். அல்லது கனவிற்கு வேறு வகையான பொருள் கூறவும் இடமிருக்கலாம். "கனவின் பொருளைப் பூரணமாக அறிந்துவிட்டதாக யாரும் நிச்சயமாகச் சொல்ல இயலாது அதற்க்குக் கண்ட பொருளானது திருப்தி அளிக்கக் கூடியதாக இருக்கின்ற காலத்திலும் அதற்கு வேறு பொருளொன்று இருக்க முடியும்" என்று பிராய்டு கூறுகிறார். ஆட்லரும் யுங்கும் இதை ஒப்புக் கொள்கிறார்கள். ஆதலால் கனவுகளை ஆராயும் போது இவற்றையெல்லாம் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். கனவென்பது பொருளற்ற தோற்றமல்ல. மன நிலையை ஒரு வினோதமான பொருளற்ற தோற்றமல்ல. மன நிலையை ஒரு வினோதமான முறையில் சித்தரிக்கும் நிகழ்ச்சி அது. அதன் உண்மையை ஆராய்ந்து கண்ட பெருமை முக்கியமாக மனப் பகுப்பியலாரையே சேரும்.

# பகற் கனவு

உறங்கும் போது காண்பது கனவு. விழித்திருக்கின்ற நிலையிலும் கனவு காண்பது உண்டு. அது தான் மனோராச்சியம் அல்லது பகற்கனவு. பகற்கனவு எனறவுடன் பகலில் உறங்கும் போது காணும் கனவு என்று கருதிவிடக் கூடாது. நன்றாக விழித்திருக்கும்போதே எழுகின்ற மனக் கொட்டைக்குத்தான் அந்த பெயர் வழங்குகிறது. தூக்கத்தில் தோன்றினால் அது கனவு. விழிப்பில் தோன்றினால் அது பகற்கனவு.

கனவு காணதவர்களே அநேகமாக இருக்கமாட்டார்கள். பகற்கனவு காணதவர்களும் வெகு சிலர். மக்கள் கூட்டத்தையே இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரித்து விடலாம். பகற்கனவு காண்பவர்கள் ஒரு பிரிவு. பகற்கனவு காண்பவன் எந்த காரியமுமே செய்யமாட்டான் என்பதில்லை. அதுபோலவே எந்த காரியம் செய்பவனும் பகற்கனவு காணமாட்டான் என்பதில்லை. மனோராச்சியத்தில் அதிக காலத்தைச் செலவிடுபவர்கள் ஒரு பகுதி. காரியம் செய்வதில் அதிக காலத்தைச் செலவிடுபவன் மற்றொரு பகுதி.

பகற்கனவு வேறு, சிந்தனை வேறு. பகற்கனவு காண்பவன் தனக்கிஷ்டபடி எல்லாம் எண்ணங்களையும் காட்சிகளையும் கற்பித்துக்கொள்கிறான். ஆனால் சிந்தனை செய்பவன் அப்படியல்ல. ஒரு குறிப்பிட்ட விஷயத்திலே அவன் தன் மனதைத் தீவிரமாகச் செலுத்தி யோசனை செய்கிறான். மனம்போன போக்கிலே அவன் செல்லுவதில்லை. அவன் மனத்தை எண்ண உலகில் உறுதியாக நடக்கும்படி அறிவைக் கொண்டு தூண்டுகிறான். பகைவர்களின் கோட்டையைக் காப்பாற்ற வேண்டுமானால் சேனைத் தலைவன் அதற்காக எத்தனை ஆழ்ந்து சிந்தித்துத் திட்டம் போட வேண்டும்!. எவ்வாறு தாக்கினால் எளிதில் வெற்றிபெற முடியும் என்றும், அதற்கு எத்தனை பெரிய படை பலம் வேண்டுமென்றும் அவன் யோசித்து முடிவு கட்ட வேண்டும். பல ஆயிரக்கணக்கான வீரர்களைப் பலி கொடுக்க வேண்டுமானாலும் அதற்க்கும் அவன் தயாராக இருக்க வேண்டும். இங்ஙனம் எண்ணிப் பார்த்து வேண்டுவனவற்றை எல்லாம் ஆயுத்தம் செய்துகொண்டு போர் தொடங்கினால்தான் வெற்றி காணமுடியும். அவ்வாறு இல்லாமல் தான் சுலபமாக எதிரியை வென்று கோட்டைக்குள் நுழைந்து விட்டதாகவும், புகழ்மாலை பெற்றுவிட போவதாகவும், புகழ்மாலை

பெற்று விட்டதாகவும் அவன் பகற்கனவு கண்டு கொண்டு இருந்தால் குறித்த காரியம் நிறைவேறாது.

காரியவாதியும் பகற்கனவு காண்பது உண்டு. ஆனால், அவன் அத்துடன் நின்று விடுவதில்லை. அவன் அந்த கனவை நனவாக்க முயல்கிறான்.உறுதியோடு காரியத்தில் ஈடுபடுகிறான். வான வெளியிலே சிறகை விரித்து வெள்ளைக் கொக்கு ஒயிலாகப் பறக்கிறது. அதை பார்த்து மனிதன் தானும் பறப்பது போல பகற்கனவு காண்கிறான. ஆயிரக்கணக்கானவர்கள் அதோடு திருப்தி அடைந்து விடுகிறார்கள். ஒன்றிரண்டு பேர்கள் அதை வைத்துக் கற்பனைக் கவிதைகள் வரைகிறார்கள். ஒருவன் உண்மையாகவே பறக்க முயல்கிறான். பகற்கனவு செய்வதால் பெற்ற விமானத்தைச் உருவாக்க அவன் தனது அறிவை உபயோகித்து ஆழ்ந்து சிந்திக்கிறான். பறப்பதிலே உள்ள ரகசியத்தைக் காணப் பிரயத்தனப்படுகின்றான். பார்ப்பதிலே உள்ள இரகசியத்தைக் காணப் உழைக்கிறான். பல சோதனைகள் செய்கிறான். அவற்றின் விளைவாக விமானம் நமக்குக் கிடைக்கிறது.

கனவிற்கும் பகற்கனவிற்க்கும் பொதுவான பல அம்சங்கள் இருக்கின்றன. அவை இரண்டும் கனவு காண்பவனையே முக்கிய கர்த்தாவாக கொண்டிருப்பவை. வாழ்க்கையில் நிறைவேறாது மனதில் மறைந்து கிடைக்கும் ஆசைகள் நிறைவேறுவதையே முக்கியமாக இரண்டிலும் காண்கிறோம். சில ஆசைகளும் எண்ணங்களும் இழிந்தவைகளாக இருக்கலாம். அவற்றை மனிதன் அறிவினால் அடக்க முயல்கிறான். அதனால் அவை ஆழ்மனதில் அழுத்திக் கிடக்கின்றன. உறங்குகின்ற சமயத்தில் அறிவின் ஆதிக்கம் சற்றுத் தளர்கிறது. அந்த சமயத்திலே அவைகள் கனவாக வெளிபடுகின்றன. அது போலவே பகற்கனவிலும் இந்த ஆசைகள் தோன்றி மனத்திற்கு ஒரு வகையான திருப்தியை அளிக்கின்றன.

பகற்கனவைப் பற்றி ஜீ.எச்.கிரீன் என்பவர் பின் வருமாறு எழுதுகிறார்:

1.நமக்குத் தெரியாமல் மனத்திலே அழுத்தி மறைந்து கிடைக்கும் ஆசைகளைப் பகற்கனவு நிறைவேற்றுகின்றது.

2.ஒருவன் தன்னைப் பற்றியே உயர்வாகக் கருதுவதை அது குறிக்கின்றது.

3.உலகத்தைப் பற்றி அவன் வெளிப்படையாகக் கொண்டுள்ள நினைப்பைத் தவிர வேறு ஒரு நினைப்பு இருப்பதையும் அது குறிப்பாகக் காட்டுகிறது.

4.காரியம் செய்ய வேண்டுமென எழுகின்ற எண்ணத்திற்கும், காரியம் செய்வதற்கும் இடையே உண்டாகும் பல முக்கியமான நிகழ்ச்சிகளில் அதுவும் ஒன்றாக இருக்கலாம்.

5.தீவிர முயர்ச்சியோடு கவனமாகக் காரியத்தில் ஈடுபட்டு இருக்கும் சமயத்தில் இல்லாது மற்ற சமயங்களில் அது ஆதிக்கம் செலுத்தத் தொடங்குகிறது.

இந்த பகற்கனவும் சிறு வயது முதற்கொண்டே உண்டாகின்றது. சிறு குழந்தைகள் விளையாடுவதை நாம் பார்த்து இருக்கிறோம். ஒரு குழந்தை தன்னை தாயாகவும், ஏதாவது ஒரு பொருளை குழந்தையாகவும் பாவித்துக் கொள்ளுகின்றது. தனது தாய் தன்னிடம் எந்த விதம் நடந்து கொள்ளுகிறளோ அது போலவே பேசுகிறது. கடுஞ்சொல் கூறுகிறது. தண்டனை கொடுக்கின்றது. அந்தக் கற்பனைக் குழந்தையிடம் தன்னிடமுள்ள குறும்புகள் எல்லாவற்றையும் இது காண்கிறது. இந்த விதமாகத் தன்னை உயர்த்தியும், தன்னிடம் உள்ள குறும்புகள் எல்லாவற்றையும் இது காண்கிறது. இந்த விதமாகத் தன்னை உயர்த்தியும், தன்னிடம் உள்ள குறைகளை அந்த கற்பனை குழந்தையிடம் பாவித்து அது விளையாடித் திருப்தியடைகின்றது.

மூன்று வயதாக இருக்கும் போது சரோஜா அடிக்கடி தனக்கே தனியாக ஒரு சொந்த வீடு இருப்பதாக பேசுவாள். “என் வீட்டில் நிறைய மிட்டாய் இருக்கின்றது. பெரிய பீரோ இருக்கின்றது” என்று என்னென்னவோ பெருமையாக சொல்லிக்கொள்வாள். ஒருநாள் அவள் தன் வீட்டிலே பெரிய விருந்து நடக்கின்றது என்றும், வடை, பாயசம் எல்லாம் ஏராளமாக இருக்கிறது என்றும் கூறிவிட்டு எங்களுடன் வந்து சாப்பிட மறுத்துவிட்டாள். அது அவளுடைய பகற்கனவைக் குறிக்கின்றது.

“குழந்தைகள் தான் அதிகப் பகற்கனவு காண்பவர்கள். அவர்களுடைய பகற்கனவுகளை ஆராய்ந்து பார்த்தால் அவை பெரும்பாலும் வாழ்க்கையில் அடையப் பெறாத ஆசைகளை நிறைவேற்றுவனவாக இருக்கும்” என்று மெக்டூகல் கூறி இருக்கிறார்.

சாதாரணமாகப் பத்து வயதில் துணிகரச் செயல்களைப் பற்றிய பகற்கனவுகள் உண்டாகின்றன. பலருடன் கூடித் தீரச் செயல்கள் செய்வது போலவும், அவற்றில் எல்லாம் தானே முக்கியாக இருப்பது போலவும் தனது தோழர்களுக்குத் தானே தலைவனாக விளங்குவது போலவும் காட்சிகள் தோன்றுகின்றன. வாலிப பருவத்திலே பிறக்கும் பகற்கனவுகள் பலதிறன் உண்டாகும். அதில் இயல்பாகவே காதல் உணர்ச்சியும் கலந்து இருக்கும்.

இப்படியாக ஒவ்வொரு பருவத்திலும் அதற்கேற்ப பகற்கனவுகள் நிகழ்கின்றன. சிறுவர்களின் பகற்கனவுகள் பொதுவாக குற்றமற்றவையாக இருக்கும். ஏனெனில் அந்த பருவத்தில் அடக்கிளடுக்க வேண்டிய இழிந்த எண்ணங்கள் உண்டாகக் காரணமில்லை.

கனவுகளை ஆராய்வது போலவே பகற்கனவையும் ஆராய்ந்தால் ஒருவனுடைய மன நிலைமையை அறிந்து கொள்ள முடியும். பகற்கனவிலே அவனுடைய ஆசைகளும் எண்ணங்களும் பொதுவாக நேரிடையாகவே வெளிப்படுகின்றன. அந்த வகையில் அவனுடைய மன நிலையைக் காண இது கனவை வீட அதிகமாக பயன்படும். ஆனால் பகற்கனவை வெளிப்படையாகப் கூறும்படி செய்வதுதான் சிரமம். இது இழிந்ததாக இருக்குமானால் வெளியில் கூறப் பொதுவாக யாரும் விரும்பமாட்டார்கள்.

கனவின் பொருளை அறிந்துகொள்ள எண்ணச் சேர்க்கை முறையைக் கையாளுவதைப் பற்றி முன்பே கவனித்தோம். அந்த ஆராய்ச்சியோடு ஒருவன் காணும் பகற்கனவையும் சேர்த்து நோக்கினால், அவனுடைய மன நிலைமையை உணரமுடியும்.

# பயம்

ஒரு நாள் இரவு இரண்டு மணி இருக்கும். புதிதாக வந்த நபர் ஒருவரோடு வெளித் திண்ணையில் அமர்ந்து உரையாடிக் கொண்டு இருந்தேன். சந்தித்துப் பல வருஷங்களாகிவிட்டபடியால் அவர் குதூகலத்தோடு தமது வாழ்க்கையைப் பற்றிச் சொல்லிக் கொண்டு இருந்தார். அவர் முகத்திலே மகிழ்ச்சி பொங்கிக்கொண்டு இருந்தது.

அது கார் காலம். வானத்திற்குப் போர்வைப் போடப்பட்டது போல எங்கும் கருமேகக் கூட்டம். திடீரென்று இடியும் மின்னலும் ஆரம்பித்தன. அதுவரைக்கும் சிரித்துப் பேசிக்கொண்டிருந்த நண்பர் இடிக்குரலைக் கெட்டு அலறி நடுங்கலானர். இடியோசை கேட்கும் ஒவ்வொரு தடவையும் அவர் துள்ளி எழுந்தார். பயந்தபடி சுற்றும் முற்றும் பார்த்தபடி இருந்தார். எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. இடி இடிப்பதைக் கண்டு இவர் இப்படி ஏன் பீதி கொள்கிறார். கார்காலத்தில் இடியும் மின்னலும் சகஜம் தானே என்று உள்ளுக்குள் ஆச்சர்யப்பட்டுக் கொண்டு இருந்தேன்.

“வீட்டிற்குள் போய்விடலாமா?” என்று அந்த நபர் அவசரமாகக் கேட்டுக்கொண்டே எழுந்துநடந்தார். வீட்டிற்க்குள் சென்று அமர்ந்த பிறகும் அவர் பீதி தணியவில்லை. இடிக்குரல் கேட்கும்போதெல்லாம் அவர் திடுக்கிட்டு எழுந்தார்.

“கார் காலத்திலேயே எங்கள் ஊரில் இப்படி இடி இடிப்பதுண்டு. ஆனால் எங்காவது இடி விழுந்து இருக்குமா என்று பார்த்தால், எங்கும் இடி இறங்கி இருக்காது.” என்று மெதுவாக கூறினேன்.

எனது வார்த்தைகள் அவருக்குத் தைரியம் அளிக்கவில்லை. அனாவசிமாகப் பயங்கொண்டு அவஸ்தைப்பட்டு கொண்டு இருந்தார். “எனக்கெனவோ இடி இடிப்பதைக் கண்டால் ஒரே பயமாக இருக்கிறது” என்று அவர் நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டே வீட்டிற்கு சென்று விட்டார்.

அந்த பயத்திற்கு அவரால் ஒரு காரணமும் கூற முடியவில்லை. “என்னவோ பயமாக இருக்கிறது” என்று சொல்லிவிட்டுச் சுருண்டு படுத்துக் கொண்டார். விரிப்பை எடுத்துப் போர்த்துக்கொள்ளவும் செய்தார். “இப்படி

இழுத்துப் போர்த்துக்கொண்டால் இடி விழாதா" என்று கேலியாக கேட்டேன். அவர் அதற்கு எந்த பதிலும் சொல்லவே இல்லை.

இவரைப் போல வீண் பீதி அடைகின்றவர்கள் பலருண்டு. சிலருக்குப் பூனையைக் கண்டால் பயம். சிலருக்கு இருட்டைக் கண்டால் பயம். கோழியைக் கண்டு அலறி ஓடுபவர்களும் உண்டு. ஏன் அவ்வாறு பயம் கொள்ளுகிறார்கள் என்று விசாரித்தால் காரணம் அவர்களுக்கே தெரியாது. சொல்ல முடியாத பெரும் பயம் ஏனோ உண்டாகின்றது.

சிங்கத்தையோ புலியையோ கண்டால் பொதுவாக அனைவருக்கும் பயம் உண்டாகின்றது. அவை கொடியவை என்ற காரணத்தினால் அந்த பயம் உண்டாகின்றது. அதை நாம் புரிந்துகொள்ள முடியும். அது தற்காப்பு உணர்ச்சியால் பிறக்கிறது. ஆனால் கோழியைக் கண்டாலும், மின்னலைக் கண்டாலும் உண்டாகின்ற பீதிதான் விந்தையாக இருக்கின்றது. இருட்டிலே தற்காப்பு உணர்ச்சியால் ஓரளவு கவனமாகச் செல்ல வேண்டும் என்ற எண்ணம் உண்டாக வேண்டுமே ஒழிய, பெரும் பயம் ஏற்பட வேண்டியதில்லை. இருட்டிலே சாதரணமாகப் பலர் நடமாடுகிறார்கள். அதனால் தீங்கு ஏற்படுவதில்லை. அவ்வாறு சாதரணமாகப் பயமடைய வேண்டாதவற்றைக் கண்டும் காரணமின்றி ஏற்படும் பெரும் பீதியை(பயம்) ஒரு வகையான கிளி என்று மனத்தத்துவர்கள் கூறுகிறார்கள்.

பல ஆண்டுகளுக்கு முன், சாதாரணமாகச் சிறு வயதில் ஏற்பட்ட ஆழந்த உள்ளக் கிளர்ச்சிதான் இந்த மாதிரியான பயத்திற்கு காரணமாக இருக்கின்றது. அந்த மனக்கிளர்ச்சியும், அது எதனால் உண்டானதென்பதும் மறந்து போய்விடும். ஆனால் அதன் விளைவாகத் தோன்றிய பயம் மட்டும் நிலைத்து இருக்கும். என்னுடன் கல்லூரியில் படித்த ஒரு மாணவன் காற்று சற்று வேகமாக அடித்தால் பயப்படுவான். அதற்க்குக் காரணம் அவன் சிறுவனாக இருந்த போது தனது சொந்த ஊராகிய நெல்லூரில் அடித்த பெரும் புயலையும் அதன் காரணமாக விளைந்த உயிர்ச் சேதத்தையும் கண்டு பயந்ததே என்று பின்னால் தெரிந்து கொண்டோம். இது போலவே ஒவ்வொரு வகையான பயத்திற்கும் ஏதாவது ஒரு காரணம் இருக்கும். இயல்பாக எழுகின்ற ஆசைகள் நிறைவேறாமல் போவதாலும், அடிப்படையான உள்ளக் கிளர்ச்சிகளிலே தடுமாற்றம் ஏற்படுவதாலும் பயம் பிறப்பதுண்டு.

எனது மாணவன் ஒருவனுக்கு சுமார் 12 வயது இருக்கும். அவன் இருட்டு அறைக்கு செல்லவே மாட்டான். அவனைக் கேலி செய்ய வேண்டுமெனச் சில மாணவர்கள் ஒரு நாள் சூழ்ச்சி செய்தார்கள். ஒரு அறைக்குள் போய் ஏதோ ஒரு புத்தகத்தை எடுத்து வரும்படி அவனை ஏவினார்கள். அவன் உள்ளே சென்றதும் மின் விளக்கை சட்டென்று மின் விளக்கை அனைத்து விட்டார்கள். அவன் அலறி அடித்துக் கொண்டு வெளியே ஓடி வந்தான். எல்லோருக்கும் அது விளையாட்டாக இருந்தாலும் அவனுக்கு அது ஒரு பெரும் பீதியாக இருந்தது. பிறகு அவனை நிதானமாக ஆராய்ந்து பார்த்ததில் இருட்டறையில் பிசாசு இருப்பதாக யாரோ கூறிப் பயமுறுத்தியது தான் அந்த பயத்திற்கு காரணம் என்று தெரியவந்தது.

பிராணிகளைக் கண்டு ஏற்படும் பயத்திற்கு சிக்மண்ட் பிராய்டு வேறு ஒரு காரணமும் கூறுகிறார். பெற்றோரிடம் உள்ள பய உணர்ச்சியானது மிருகங்களிடம் பயமாக மாறுகிறதாம். “மிருகங்களைக் கண்டு பிறக்கும் பயங்களில் பலவற்றை ஆராய்ந்த போது அவை பெற்றோரிடமுள்ள பயத்தால் பிறந்தவை எனத் தெரிய வந்தது” என அவர் கூறுகிறார்.

பொதுவாக நோக்கும்போது சந்தர்பத்திற்கும் அனுபவத்திற்கும் ஏற்றவாறு பலவகையான பயங்கள் பிடிக்கின்றன. மூடப்பட்டுள்ள இடத்தைக் கண்டு பயம், திறந்த வெளியில் பயம், செங்குத்தான இடத்தின் பயம், நெருப்பு பயம், இருட்டு பயம், தூசு பயம், பூனை பயம், பயத்தைப் பற்றி பயம் எனச் சாதரணமாகப் பல பயங்கள் காரணமாக மக்கள் வருந்துவதை நாம் காணலாம். அவசரமும், மன அதிர்ச்சிகளும் நிறைந்த இந்தகால வாழ்க்கையிலே பலர் பலவகைப்பட்ட பயங்களால் பீடிக்கப்பட்டு இருகின்றனர்.

அவ்வாறு பயம் பிடித்து இடர்பெயர்வது முட்டால் தனம் என போதித்தாலும் அந்த பயத்திற்கு ஒரு காரணமும் இல்லை என்று எதுத்து காட்டுவதாலும் அதைப் போக்கிவிட முடியாது. இருட்டறையைக் கண்டு பயம் அடைபவனை அதற்குள்ளேயே வழுகட்டாயமாக இருக்கச் செய்து அதில் ஒரு ஆபத்தும் இல்லையெனக் காண்பித்து அந்த பயத்தை போக்கிவிடலாம் என சிலர் முயலுகிறார்கள். அவ்வாறு செய்வதால் பயம் மாறுவதே கிடையாது.

அந்த பயத்தை போக்குவதற்கு ஒரே ஒரு ஒரு வழி தான் உண்டு. சாதரணமாக பயம் கொள்பவர் இளமையில் ஏற்பட்ட ஏதாவது ஒரு சம்பவமோ அல்லது அனுபவமோ காரணமாக இருக்கும் என்று அறிந்து கொண்டிருக்கிறோம். அந்த சம்பவத்தையும் நிலைமையையும் மீண்டும் ஞாபகத்திற்கு கொண்டு வர வேண்டும். ஆழ்மனதிலே அவை அழுத்திக் கிடைக்கும். அனுபவம் வாய்ந்த மனத்தத்துவரின் உதவியால் அவற்றை நினைவு மனதிற்குக் கொண்டு வந்து விடலாம். அவ்வாறு கொண்டு வந்து அன்றடைந்த உள்ளக் கிளர்ச்சியைத் திரும்பவும் உணரும்படி செய்துவிட்டால் அந்த பயம் தானாகவே நீங்கிவிடும். பயம் என்பது காரணமின்றி ஏற்படும் பயம். பொதுவாக அது ஒரு ஆழ்ந்த உள்ளக்கிளர்ச்சியால் உண்டாவது. அதைப் போக்குவதற்கு மன நோய் வல்லுனர்களே தகுதிவாய்ந்தவர்கள்.

# கற்றுக் கொடுத்தது யார்?

இப்பொழுதுதான் பிறந்த கன்றுக் குட்டி மெதுவாக முயன்று எழுந்து நிற்கிறது. தாயின் மடியருகே சென்று பால் குடிக்கத் தொடங்குகிறது. மடியிலே வாயை வைத்துப் பால் குடிக்க அதற்கு யார் கற்றுக் கொடுத்தார்கள்?

வாத்து முட்டை வைத்து, அந்த பறவை குஞ்சுகள் முட்டையில் இருந்து வெளிவருகின்றது. தண்ணீரைக் கண்டதும் அதில் தாராளமாக இறங்கி நீந்துகிறது. அதற்கு யார் நீந்தக் கற்றுக் கொடுத்தார்கள்?

குழவி ஒன்று பருவம் அடையும்போது கூடுகட்ட ஆரம்பிக்கிறது. அதில் ஒரு பக்கத்திலே முட்டையிடுகிறது. புளுவொன்றைப் பிடித்து வந்து கூட்டிலே வைக்கிறது. புழுவைத் தன் கொடுக்கால் கொட்டி அது மயக்கம் அடைந்த நிலையில் இருந்தபோதும் உயிரோடு வைக்கிறது.முட்டையில் இருந்து குஞ்சுகள் வெளியில் வந்தவுடன் அதற்கு உணவாக அருகில் இப்படிப் புழுவை வைத்துக் கூட்டை மூடிவிட்டு வெளியே போய் இறந்து விடுகிறது. அந்தக் குழவிக் குஞ்சுகள் பெரிதாகும் போது அவைகளும் இது போல் செய்கின்றன. அவற்றிற்கு யார் கற்றுக் கொடுத்தார்கள்? கற்றுக் கொடுக்கத் தாய்க் குலவிகூட இல்லையே? பிறகு எப்படி அந்த குஞ்சுகளும் தாய் செய்தது போலவே செய்கின்றது?

இந்த மாதிரியான கற்றுக் தெரிந்துகொள்ளாத செயல்களைச் செய்யும்படி தூண்டும் பிறவிச் சக்தி ஒன்றிருக்கிறது. அதன் பெயர் இயல்பூக்கம் அல்லது உள்ளுணர்வு என்று பெயர். உணவு தேடுதல், கூடி வாழுதல், இடம் பெயர்தல், இனப்பெருக்கம் என்று இப்படி பல உள்ளுணர்வான செயல்கள் உயிரினங்களில் இருப்பதாக மெக்டூகல் போன்ற மனத்தத்துவர்கள் குறிப்பிடுகிறார்கள். ஒவ்வொரு உள்ளுணர்வும் செயல்களுக்கு ஏற்ற உணர்வுகளும் தோன்றும் என்று விளக்கினார்.

இந்த உள்ளுணர்வு பற்றி மாறுபட்ட கருத்த்துகளும் உண்டு. உள்ளுணர்வு இல்லை என்று வாதிடுபவர்களும் உண்டு. உள்ளுணர்வு இருந்தால் பூச்சிகள், பறவைகள், விலங்குகள் முதலியவைகளில் அதன் ஆதிக்கத்தைக் காணலாம். மனிதனிடத்திலே அதற்கு ஆதிக்கமில்லை என்று கூறுபவர்களும் உண்டு.

இந்த உள்ளுணர்வை இல்லை என்று மறுக்கிறவர்கள் தமது ஆராய்ச்சிகளினால் இந்த உள்ளுணர்வு செயலாக எண்ணிவந்த சில செயல்களின் காரணத்தைக் கண்டுபிடித்து அந்த செயல்கள் சாதரணமான அனுபவத்தால் அல்லது அறிவினால் ஏற்பட்ட நடத்தை என்று கூறுகிறார்கள்.

இருண்ட குகையில் வவ்வால் தாரளமாக பறந்து வட்டமிடுகிறது. நீட்டிக் கொண்டிருக்கும் கரடுமுரடான கற்களின் மேல் அவைகள் மோதிக்கொள்வதே கிடையாது. ஒருவேளை இருட்டிலே அதற்க்குக் கண் நன்றாக தெரியுமோ என்று சந்தேகித்து அதன் கண்களை மூடிக் கட்டி பறக்கவிட்டார்கள். அப்பொழுதும் அது எதனுடனும் மோதிக்கொள்ளாமல் இருண்ட குகைக்குள்ளே தாரளமாக வட்டமிடுகின்றது!. இதை உள்ளுணர்வு அன்று நம்பிக்கொண்டு இருந்தார்கள். 1940 ஆம் ஆண்டில் டொனல்டுகிரிப்பின், ராபர்ட் கலம்பாஸ் என்ற இரண்டு உயிரியியலார்கள் இந்த அற்புத உண்மையைக் கண்டு பிடித்தார்கள். கண்களை மூடிவிட்டாலும் இருட்டு அறியிலே வவ்வால் எதன் மீதும் மோதாமல் பறக்கின்றது. ஆனால் அதன் காதுகளை மூடிவிட்டு கண்கள் திறந்து இருந்தாலும் அது இருட்டில் பறக்கும் போது பல இடங்களில் மோதிக்கொள்கின்றது. இந்த ஆராய்ச்சியில் இருந்து ஒரு பெரிய உண்மை தெரிய வந்தது. வவ்வாலுக்கு நுட்பமான ஒலியைக் கெட்டு அறிந்துகொள்ளும் சக்தி உண்டு. அதனால் அது பறக்கும்போது உண்டாகும் நுட்ப ஒலிகள் எதிரிலுள்ள தடைகளின் மேல் பட்டு திரும்பிப் பிரதிபலித்து வரும்போது அவற்றைச் சற்று தூரத்திலேயே உணர்ந்து தடைகளை விட்டு விலகித் தப்பிச் செல்கின்றது. இங்கே உள்ளுணர்வு செயல் ஒன்றும் இல்லை என்று அவர்கள் கண்டார்கள்.

ஆனால் எல்லா உள்ளுணர்வுகளும் இவ்வாறு ஆராய்ந்து அவற்றிற்குக் காரணம் கூறுவது கடினம். அத்தனை பெரிய ஆராய்ச்சியிலே நாம் ஈடுபட வேண்டியதுமில்லை. உள்ளுணர்வு பற்றி பொதுவாக தெரிந்துகொள்வதோடு அவை மனிதனுடைய செயல்களை எவ்வாறு பாதிக்கின்றது என்பதையும் தெரிந்துகொண்டால் போதும். இந்த உள்ளுணர்வு என்பது முன் அனுபவம் இல்லாமல் இயல்பாகவே செய்யப்படும் காரியமாகும். கன்றுக்குப் பாலுட்ட முன்னால் தெரியாது. உள்ளுணர்வு பூர்வமாக கன்று அதைச் செய்கிறது. யாரும் கற்றுக்கொடுக்காமல் குழவி தன் வேலையை செய்கிறது, முட்டையிடுகிறது. இவ்வாறு ஒரு ஜீவராசியின் நலத்திற்கும், அதன் இனம் அழிந்து போகாமல் பாதுகாப்பதற்கும் இந்த உள்ளுணர்வு செயல்களை

கொண்டுள்ளது. ஒரு தூக்கணங்குருவி கூடு கட்டுவது போலவே மற்ற தூக்கனங்குருவிகளும் கூடு கட்டுகின்றன. இந்த உள்ளுணர்வின் மற்றொரு தன்மை என்னவென்றால் அனுபவத்தால் அது முதலில் தூண்டுகோலாக இருக்கின்றது.

விலங்குகள் உள்ளுணர்வின் நிலையிலே பல காரியங்களை செய்கின்றன. மனிதனும் குழந்தை பருவத்தில் அதன் மூலமே அவ்வாறு செய்கிறான். ஆனால் அவன் முதிர்ச்சியடைய அடைய அறிவாலும் அனுபவத்தாலும் உள்ளுணர்வு செயல்கள் மாறுதலடைகின்றன. சிந்தனையால் மாறுதலடையாத உள்ளுணர்வு செயல்களும் குறைந்து விடும்.

இனபெருக்க உணர்வு மிக வலிமையானது தான். ஆனால் மனிதன் மிருகங்கள் போல நடந்து கொள்ளலாமா? இந்த உள்ளுணர்வு மனிதனிடம் செயல் படும்போது அதிலே ஒரு வரைமுறை இருக்க வேண்டும். அதை அவன் மீறினால் சமூகத்தால் ஒதுக்கப்படுவான்.

இந்த உள்ளுணர்வுகளை அடக்கி ஒடுக்கி அழிப்பது என்பது இயலாத காரியம். ஆனால் விரும்பத்தாகத உள்ளுணர்வு செயல்களை வேறு நல்ல வேளைகளில் செல்லும்படியாக மாற்றிவிடலாம்.

எப்படி மாற்றுவது? அது முடியுமா? முடியும். ஓர் எளிதான உதாரணத்தை காண்போம். போரிடும் உள்ளுணர்வால் உந்தப்பட்டு ஒருவன் தன்னுடைய தோழர்களுடனேயே சண்டை செய்யலாம். அதை மாற்றித் தனது தேசத்திற்காக அவன் போரிட முன் வரலாம். அதை மாற்றி தனது தேசத்திற்காக அவன் போரிட முன் வரலாம். மரத்தைப் பிடுங்கி மனிதனை மோதக்கூடிய ஆற்றல் கொண்டது யானை. ஆனால் அந்த யானையைப் பழக்கிவிட்டோம் என்றால் அது தன் பலத்தை மனிதனுக்கு உதவியாகப் பல தொழில்கள் செய்யப் பயன்படுத்தும். பெரிய பெரிய மரங்களை ஓர் இடத்தில் இருந்து மற்றொரு இடத்திற்கு எடுத்துச் செல்ல உதவும்.

இவ்வாறு உள்ளுணர்வை மாற்றி விடுவதற்கு உயர் மடை மாற்றம் (Sublimation) என்று பெயர். இந்த உள்ளுணர்வோடு தொடர்புடைய உள்ளக் கிளர்ச்சிகளைப் பற்றி அடுத்த பகுதியில் விவரிக்கும் போது இந்த உயர்மடை மாற்றத்தைப் பற்றி மேலும் அறிவோம்.

# உள்ளக் கிளர்ச்சி

மனம் என்பது ஒரு மாயமாக இருந்தாலும் அதில் எத்தனை எத்தனை குமுறல்கள், கொந்தளிப்புகள், கிளர்ச்சிகள் தோன்றுகின்றன! கோபம் பிறக்கிறது, பயம் உண்டாகிறது. இப்படி எத்தனை விதமான அனுபவங்கள்! கோபம், பயம், காதல், காமம், துக்கம், வெறுப்பு முதலியவைகளுக்கு உள்ளக் கிளர்ச்சிகள் என்று பெயர்.

குழந்தைகள் தங்கள் கவலைகளை உடனடியாக அழுகையாக வெளிப்படுத்துகிறது. அடுத்த விநாடியிலே மகிழ்ச்சியால் சிரிக்கிறது. குழந்தைகள் தங்கள் உள்ளக் கிளர்ச்சிகளை உடனே வெளிபடுத்துகிறது. விரைவிலே அவை மறைந்தும் போகின்றன.

சரோஜா ஓடி வருகிறாள். "அம்மா, அடுத்த வீட்டுக் கிட்டுவுக்கு மிட்டாய் கொடுக்க வேண்டாம்" என்று அவன் மேலே வெறுப்போடு பேசுகிறாள். ஆனால் சிறிது நேரத்திற்குள்ளே இரண்டு பேரும் சேர்ந்து விளையாடத் தொடங்கி விடுகிறார்கள். சரோஜா தன்னிடமிருந்த மிட்டாயை அவனுக்குக் கொடுக்கிறாள். கிட்டுவின் மேல் ஏற்பட்டு இருந்த வெறுப்பை அவன் மறந்து விடுகிறாள்.

இந்த குழந்தைகளைப் போல உலக மக்கள் இருக்க கூடாதா என்று கூட சொல்லத் தோன்றுகிறது. ஆனால் மனிதன் தனது உள்ளக் கிளர்ச்சிகளை அனைத்தையும் குழந்தைகளைப் போல திடீர் என்று உடனே வெளிபடுத்தலாம்? சமூக வாழ்க்கையிலே அது சரிப்படுமா?

அவசரமாக ஒருவன் ரெயில் வண்டிக்குள்ளே நுழைகிறான். செருப்புக் காலால் உனது கால் விரலை நன்றாக மிதித்து விடுகிறான். வழிப் பொறுக்க முடியாமல் உனக்குக் கோபம் பொங்கி வருகிறது. வந்தவன் கன்னத்தில் அரையலாம் என்று ஆத்திரம் பிறக்கிறது. உடனே அடித்து விடலாமா அல்லது வாயில் வந்தபடியெல்லாம் அவனைப் பேசிவிடலாமா?

ஒரு தேசம் மற்றொரு தேசத்திற்கு ஏதோ ஒரு தவறான காரியம் செய்து விடுகிறது. அதற்காக போர் தொடுத்து விடலாமா? காமம் குரோதம் பொறாமை இப்படி எத்தனயோ உள்ளக் கிளர்ச்சிகள் இருக்கின்றன.

அவற்றிற்கெல்லாம் ஆட்சி அதிகாரம் கிடைத்துவிட்டால் சமூக வாழ்க்கையே நிலைகுலைந்து போகும் என்பது போலத் தோன்றுகிறது.

மனிதன் தனது உள்ளக் கிளர்ச்சிகள் பலவற்றைக் கட்டுப்படுத்திப் பழகிக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. அவன் விலங்குகளுடன் ஓரளவு தமது உள்ளக்கிளர்ச்சிகளை கட்டுப்படுத்தப் பழகிக்கொள்கின்றன என்று தோன்றுகிறது. மனிதன் அவற்றைவிடத் தாழ்வாக நடக்க முடியாது. அவனுடைய நாகரீகம், அவனுடைய பண்பாடு அவற்றின் பெருமையெல்லாம் அழியாதிருக்க வேண்டுமானால், சமூக வாழ்க்கை நிலைக்க வேண்டுமானால் மனிதன் தனது இழிந்த கிளர்ச்சிகளைக் கட்டுப்படுத்தப் பழகிக் கொள்ள வேண்டும். இந்த உள்ளுணர்வுகள அடக்கி அழித்து விட முடியாது என்று கண்டோம். உள்ளுணர்வுகளுடன் சேர்ந்து பல உள்ள கிளர்ச்சிகள் தோன்றுகின்றன. ஆகவே உள்ளக் கிளர்ச்சிகளையும் அடியோடு அழித்துவிட முடியாது. அப்படி முயலும் போதுதான் ஆழ்மனக் கோளாறுகள் பல உண்டாகின்றன என்று கூறுகிறார்கள். ஆனால் இழிந்த உள்ளக் கிளர்ச்சிகளையும், உள்ளுணர்வுகளையும் வேறு நல்ல வகையில் திருப்பிவிட்டு உயர்மடை மாற்றம் செய்யலாம். காம இச்சையை அடக்க முயலும் ஒருவன் அவன் பக்தனாக இருந்தால் அதை கடவுளிடம் உயர்ந்த பக்தியாக மாறச் செய்கிறான். அல்லது ஜீவராசிகளிடத்தே அளவு கடந்த அன்பாக மாற்றி அவற்றின் சேவையில் ஈடுபடுகிறான். அவன் கலைஞனாக இருந்தால் அழகிய கலைச் சிருஷ்டியில் அதை மாற்றுகிறான்.

இச்சைகள் நிறைவேறாத காலத்தில் இப்படிப் பட்ட மடை மாற்றமும் இல்லாவிட்டால் தான் மன சஞ்சலங்கள் ஏற்படக் காரணமாகின்றன.

மறிவினையாக மனிதன் சில காரியங்களை செய்கிறான். மறிவினை (Reflex action) என்பது ஒரு புதிய சொல். ஆனால் அதைப் புரிந்து கொள்வது சிரமம் இல்லை.

ரெயிலிலே பிரயாணம் செய்யும்போது கரித்தூள் ஒன்று கண்ணில் விழுகின்றது. கண் உடனே மூடிக்கொள்கிறது. கண்ணீர் மளமள என்று வருகின்றது. அப்படி வந்து கண்ணுக்கு ஏற்பட்டுள்ள தொந்தரவைத் தவிர்க்க முயல்கிறது.

கண் மூடுவதும், கண்ணீர் பெருகுவதும் நாம் நினைத்துப் பார்த்து செய்த காரியங்கள் அல்ல. அவை தாமாகவே நிகழ்கின்றன. அப்படிப்பட்ட

செயல்களுக்குத் தான் மறிவினைகள் என்று பெயர். தும்முதல், குறட்டை விடுதல் போன்ற காரியங்கள் எல்லாம் மறிவினைகளே.

உள்ளுணர்வுகளும், உள்ளக்கிளர்ச்சியாலும் மனிதன் பல செயல்களில் ஈடுபடுகிறான். அறிவைக்கொண்டு எண்ணித் துணிந்து பல செயல்கள் செய்கிறான். பழக்கத்தின் வலிமையால் சில செயல்களைச் சிந்தனையின் தூண்டுதல் இல்லாது இயல்பாகவே செய்யவும் கற்றுக் கொள்ளுகிறான். "காலையில் படுக்கையில் இருந்து எழுந்தது முதல் இரவில் படுக்கப் போகும் வரை செய்யும் பல செயல்கள் பழக்கத்தின் பயனாக இயல்பாகவே நடைபெறுகின்றன. உண்பது, ஆடை அணிவது, நண்பர்களை வரவேற்றுப் பேசுவது – எல்லாம் பல நாட்களில் ஏற்பட்ட பழக்கத்தினால் மனத்தின் துண்டுதல் இல்லாமல் ஒழுங்காக அமைகின்றன" என்று வில்லியம் ஜேம்ஸ் என்ற மனத்தத்துவர் கூறுகிறார்.

பழக்கத்தினால் செய்யும் வினைக்கும் மறிவினக்கும் வேறுபாடு உண்டு. பழக்கத்தினால் செய்யும் வினையை முதலில் தொடங்கும் போது மனத்தின் தூண்டுதலால் அதன் துணிவுப்படி செய்தோம். பிறகு பல தடவை அவ்வாறே எண்ணிச் செய்ததால் அது இயல்பான பழக்கமாக நாளடைவில் ஆகிவிடுகிறது. அந்த நிலையில் மனதின் தூண்டுதல் அவசியம் இல்லை என்றே கூறலாம். இவ்வாறு பல சாதாரணக் காரியங்களைப் பழக்கத்திற்குக் கொண்டு வந்துவிடுவதால் மனதிற்கு வேறு உயர்ந்த செயல்களைப் பற்றி எண்ணித் துணிய அவகாசமும் சக்தியும் கிடைக்கும்.

பழக்கத்திண் வலிமையாகவே இயல்பாகவே பல காரியங்களைச் செய்து விடலாம் என்பதனால் பழக்கத்தை உண்டு பண்ணிக்கொள்வதில் மிகுந்த எச்சரிக்கை வேண்டும். நல்ல பழக்கங்களை ஆரம்பத்தில் இருந்தே ஏற்படுத்தி கொள்ளவிட்டால் நமது பழக்கங்களே நமக்கு தீமையாக முடிந்து விடும்.

ஆகவே மனிதன் உள்ளுணர்வு காரணமாகவும், உள்ளக்கிளர்ச்சியாலும், பழக்கத்தாலும் என்னைத் துணிவதாலும் மிகப் பல காரியங்களைச் செய்தல் என்று ஏற்படுகிறது. மறிவினையாகவும் சில காரியங்களை மனிதன் செய்கிறான். சில செயல்கள் பழக்கத்தின் வலிமையால் மறிவினை போலவே அமைந்து விடுகின்றன. ஓடும்போது கால் இடறி ஒருவன் கீழே விழுகிறான். அவனுடைய மார்பு கூடோ, தலையோ

தரையில் மோததபடி கை முதலில் தரையில் ஊன்றித் தடுத்துக் கொள்கிறது. கையைத் தரையில் ஊன்றி மற்ற உறுப்புகளைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்று எண்ணி இந்த காரியத்தை நாம் செய்வதில்லை. இளம் பிராயத்தில் இருந்து ஏற்பட்ட பழக்கத்தின் வலிமையால் மறிவினை போலவே இது நடைபெறுகிறது. இதை 'அரைமறிவினை' என்று சிலர் சொல்வார்கள்.

மேலே கூறியவற்றில் இருந்து மனிதனுடைய செயல்களுக்கு அவனுடைய மனம் எவ்வுளவு தூரம் காரணமாக இருக்கிறது என்று தெரிகிறது. மறிவினைச் செயல்களைக் கூட மனத்தின் சிந்தனை வலிமையால் ஓரளவு மாற்றியமைக்க முடியும். மனதின் வலிமையால் நல்ல பழக்கங்களை ஏற்படுத்திக்கொள்ளலாம். இந்த உள்ளுணர்வு மற்றும் உள்ளக்கிளர்ச்சியும் உயர் மடைமாற்றம் பெற்றுச் சிறப்பாக அமையச் செய்யலாம். அவ்வாறு செய்வதால் மனிதனுடைய வாழ்க்கை உயர்வடைகிறது.

# ஓட்டம் முதலிலா, பயம் முதலிலா?

உள்ளக் கிளர்ச்சிகள் எத்தனை என்பது பற்றிச் சில ஆண்டுகளுக்கு முன்னரெல்லாம் பெரிய பெரிய பட்டியல்கள் வெளியிடுவதுண்டு. ஒவ்வொரு கிளர்ச்சியின் தன்மையென்ன, அதனோடு தொடர்புடைய உள்ளுணர்வு என்ன, அது பிறப்பில் இருந்து உணடானதா என்று இப்படியெல்லாம் ஆராய்ச்சிகள் நடைபெறும்.

நடத்தைகொள்கை உளவியலைத் தோற்றுவித்த வாட்சன் என்பவர் பச்சைக் குழந்தைகளைக் கொண்டு ஆராய்ச்சிகள் நடத்தியதன் பயனாக மனிதனுக்குப் பயம், கோபம், அன்பு என்ற மூன்று உள்ளக் கிளர்ச்சிகள் தான் இயல்பாகவே அமைந்திருக்கின்றன என்று கூறினார். இவர் கூறியதைப் பொதுவாக எல்லோரும் ஆமோதிப்பார்கள்.

ஆனால் சமீபத்தில் சில மனத்தத்துவர்கள் செய்த ஆராய்ச்சியின் விளைவாக மேலே கூறியவர் குழந்தைகளின் உள்ளக் கிளர்ச்சிகள் தெளிவாகவும் தனித் தனியாகவும் இருக்கின்றனவா என்பதில் ஐயம் தோன்றியிருகிறது. குழந்தைப் பருவத்திலேயே உள்ளக் கிளர்ச்சிகள் இருக்கின்றன என்பதை மட்டும் நாம் தெரிந்துகொண்டால் போதும். அதற்கு மேற்பட்ட ஆராய்ச்சிகளை மனதத்துவர்களுக்கு விட்டு விடலாம்.

உள்ளக் கிளர்ச்சிகளைப் பற்றி இன்னும் ஒரு வேடிக்கையான விவாதம் உண்டு. உள்ளக் கிளர்ச்சி முதலில் தோன்றி அதன் விளைவாகச் செயல் நடைபெறுகிறதா அல்லது செயல் நடைபெற்று அதன் விளைவாக உள்ளக்கிளர்ச்சி தோன்றுகிறதா என்பதைப் பற்றி பெரிய விவாதம் ஏற்பட்டுவிட்டது.

மனத்திலே கவலை உண்டாகிறது. அதனால் ஒருவன் அழுகிறான் என்று நாம் சொல்லுகிறோம். அது தான் உண்மை என்று நம்பிக் கொண்டு இருக்கிறோம். ஆனால் வில்லியம் ஜேம்ஸ் என்ற மனத் தத்துவரும், கார்ல் லாங் என்ற உடலியல் நிபுணரும் நமது நம்பிக்கைக்கு முற்றிலும் மாறான ஒரு கருத்தைப் புதிதாக வெளியிட்டார்கள். "முதலில் மனிதன் அழுகிறான்; பிறகுதான் காவல் என்ற உள்ளக் கிளர்ச்சி தோன்றுகிறது" என்று அவர்கள் கூறினார்கள். அதாவது உடலிலே மாறுதல்கள் ஏற்பட்ட பிறகே

அவற்றிற்கேற்ற உள்ளக் கிளர்ச்சிகள் எழுகின்றன என்று அவர்கள் வாதிட்டார்கள்.

இந்த கொள்கை உண்மை என்றும் சரியல்ல என்றும் நிருபிக்க எத்தனையோ சோதனைகள் நடந்திருக்கின்றன. "நீ முதலில் ஓட்டம் பிடிக்கிறாய்; பிறகு தான் பயம் தோன்றுகிறது" என்று கூறினால் சிரிக்கத்தான் தோன்றும். ஆனால் அவ்வுளவு சுலபமாக இந்தக் கொள்கையைத் தீர்த்துக் கட்டிவிட இதுவரையிலும் முடியவில்லை.

ஷெரிங்டன், கானன் என்ற இருவர் தாங்கள் செய்த ஆராய்ச்சிகளைக் கொண்டு இந்தக்கொள்கை தவறானது என்று காட்டச் சில ஆண்டுகளுக்கு முன்னே முயன்றார்கள். ஆனால் இவர்களுடைய ஆராய்ச்சிகளைக் கொண்டு இந்தகொள்கையை முடிவாக மறுக்க முடியாது என்று ஆங்கேல் என்ற மற்றொரு அறிஞர் தக்க காரணங்களுடன் விளக்கியிருக்கிறார்.

இந்த விவாதத்தின் முடிவு எப்படியானாலும் உள்ளக்கிளர்ச்சிகளைப் பற்றிப் பொதுவாக நாம் அறிந்துகொள்ள வேண்டிய விஷயங்களை அது பெரிதும் பாதிக்காது. நமது உடம்பின் வெவ்வேறு பாகங்களில் வெவ்வேறு சுரப்பிகள் (Glands) இருக்கின்றன. வாயில் உமிழ்நீர் சுரப்பது ஒரு வகைச் சுரப்பியால்தான். வளர்ச்சிக்கு உதவ ஒருவகைச் சுரப்பி இருக்கிறது. இப்படி பலச் சுரப்பிகள் இருந்து பல வேலைகளைச் செய்கின்றன.

சுரப்பிகளிலே நாலமில்லாத சுரப்பிகள் சில உண்டு. அவை தம்மிடத்துச் சுரக்கும் நீரை நேராக இரத்தத்தில் கலக்கும்படி செய்கின்றன. அவைகள் உள்ளக் கிளர்ச்சிகளால் உடம்பிலும் செயலிலும் ஏற்படும் மாறுதல்களுக்குக் காரணமாக இருக்கின்றன என்று கண்டிருக்கிறார்கள். அட்றினல் என்ற சுரப்பி சிறுநீர்ப் பைக்கு மேலே இருக்கிறது. வலி, பயம், கோபம் ஆகிய கிளர்ச்சிகளால் அந்தச் சுரப்பி பாதிக்கப்படுகிறது என்றும், செயற்கை முறையில் இந்த சுரப்பி நீரை ஒருவனுடைய இரத்தத்தில் சேரும்படி செய்தால் பயத்தால் ஏற்படும் உடல் மாறுபாடுகள் எல்லாம் உண்டாகின்றன என்றும் கானன் என்பவர் ஆராய்ந்து கூறி இருக்கிறார். இவ்வாறே மற்ற சுரப்பிகளின் தன்மைகளை ஆராய்ந்து கண்டிருக்கிறார்கள்.

சுரப்பிகள் அல்லது மற்ற உடல் உறுப்புகளின் செய்கைகளால் உள்ளக்கிளர்ச்சிகள் தோன்றுவதாலும் மனிதனுடைய வாழக்கையிலே ஏற்படும் விளைவு ஒன்று தான். இழிந்த உள்ளக் கிளர்ச்சிகளுக்கு ஆட்பட்ட

மனிதன் வீழ்ச்சி அடைகிறான். அவற்றிற்கு ஆட்படாமல் அவற்றை அவற்றை உயர்மடை மாற்றம் செய்துகொண்டவன் உயர்வடைகிறான். இதைத்தான் நாம் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும்.

அறிவு, பகுத்தறிவு என்றெல்லாம் நாம் பேசுகிறோம். ஆனால் உள்ளக் கிளர்ச்சிகளுக்கு முக்கிய காரணமாக இருக்க நல்ல பழக்கங்களையும், பற்றுதல்களையும், இலட்சியங்களையும் உண்டாக்கி கொள்வதாலும், திட சித்தத்தாலும் ஒருவன் தனது உள்ளக்கிளர்ச்சிகளை நல்வழிப்படுத்திக் கொள்ள முடியுமானால் அவன் மேம்பாடு அடையலாம், மனசாட்சி அறிவும் இந்த முயற்சியிலே அவனுக்கு துணையாக நிற்க வேண்டும்.

# நமக்குப் பெருமை

சமீபத்தில் ஒரு சினிமா காட்சியைப் பார்த்தேன். ஆழ்மனதிலே ஏற்பட்டுள்ள சிக்கலை அடிப்படியாகக் கொண்டு, அந்த படம் உருவாக்கி இருக்கிறார்கள். உள்ளத்தை கவரும் கதை அது. அதிலே ஒரு கட்டத்திலே ஒன்றுக்கு பின் ஒன்றாக எத்தனையோ கதவுகள் திறக்கபடுவது போல ஒரு காட்சியைக் கற்பனை செய்திருக்கிறார்கள். முதலில் ஒரே கதவு தான் எதிரிலே தோன்றுகிறது. அது திறக்கிறது. உள்ளே மற்றொரு கதவு. அது திறந்ததும் மற்றொரு கதவு. இப்படியே கதவுகள் ஒன்றுக்குப் பின் ஒன்றாக தோன்றுகின்றன. அவற்றிற்கு முடிவே இல்லை போலக் காண்கிறது.

மனத்தின் பல நிலைகளையும், ஆழத்தையும் அந்த மாதிரி உருவகப்படுத்தி அந்த காட்சியிலே காட்டி இருக்கிறார்கள். மனம் அத்தனை மாயமானது. அதன் விசித்திரச் செயல்களை எல்லாம் பொதுப்படையாக இதுவரை ஆராய்ந்தோம். மனம் என்றால் என்ன என்று திட்டமாக எடுத்துச் சொல்ல முடியாவிட்டாலும் அதன் செயல்களை ஒருவாறு தெரிந்து கொள்ள இயலும் படி இருந்தது. அதன் முக்கிய அம்சம் நனவு மனம், நனவிலி மனம், நனவடி மனம்(வெளிமனம், மறைமனம், இடைமனம்) எவ்வாறு வேலை செய்கிறது என்று பார்த்தோம்.

இந்த மனத்தின் பெருமையைப் பற்றியும், மாயத்தைப்பற்றியும் எடுத்து விளக்கிக் கவிஞர்கள் பாட்டு எழுதி இருக்கிறார்கள். மனக்குரங்கு என்று கூடப் பழித்துக் கூறி இருக்கிறார்கள். தத்துவப் பெரியோர்களும் சிந்தையை அடக்க முடியவில்லையே என்று வெளிப்படையாகச் சொல்லி இருக்கிறார்கள்.

மனத்தினாலேயே மனிதனுக்குத் தனிப்பட்ட பெருமை ஏற்பட்டு இருக்கிறது. மனம் என்பதொன்று இல்லாவிட்டால் அவனுக்குப் பெருமையே இல்லை என்று கூறலாம். அதன் உதவியாலேயே அவன் எத்தனையோ ஆச்சர்யமான காரியங்களையெல்லாம் சாதித்திருக்கிறான். ஆனால் அது அவனைக் குழியில் தள்ளிவிடவும் செய்யும். மறைமனதிலே மறைந்து கிடைக்கும் இச்சைகளை பகுத்தறிவையும், மனசாட்சியையும் ஏமாற்றிவிட்டு அதற்கு மேல் ஆதிக்கம் செய்யத் தொடங்கி விடலாம். அதை உணர்ந்து எச்சரிக்கையாக இருக்க வேண்டும். நமது செயல்களையும், நோக்கங்களையும்

அடிக்கடி அலசி ஆராய்ந்து மதிப்பிட பழகிக்கொள்ள வேண்டும். இது எளிதான காரியமல்ல. ஏனெனில் அதற்கும் அந்த மனதையே நம்ப வேண்டியிருக்கிறது. அதற்குத் தான் மனத்தைப் பற்றிய அறிவு அவசியமாகிறது.

மனத்தின் தன்மைகளை உணர்ந்துகொண்டு அதைச் சரிவரப் பயன்படுத்தி நடந்தால் வாழ்க்கையிலே வெற்றியடையலாம். கனவும், பகற்கனவும் மனதின் தன்மைகளை அறிய உதவுகின்றன. உள்ளுணர்வுகள், உள்ளக்கிளர்ச்சிகள், ஞாபகசக்தி, கற்பனா சக்தி ஆகியவற்றின் இயல்புகள், பயங்கள் ஆகியவற்றை அறிந்துகொள்வதாலும் மனதின் தன்மைகள் தெளிவாகின்றன.

மனத்தைப்பற்றி இன்னும் எவ்வுளவோ விரிவான ஆராய்ச்சிகள் செய்யலாம். அவற்றிற்கெல்லாம் இங்கு இடமில்லை. பொதுப்படையாக எல்லோருக்கும் தெரிய வேண்டிய அடிப்படையான சில முக்கிய விஷயங்களையே இங்கு எடுத்துக் கூற விரும்பினேன். பிறக்கும்போது மனம் என்று ஒரு தனி உறுப்புக் கிடையாது என்று சிலர் கூறுகிறார்கள். சிலர் மறிவினைகளை மட்டும் உடையவானாக மனிதன் உலகத்தில் தோன்றுகிறான். அனுபவங்களின் மூலமாக மனம் சிறிது சிறிதாக உருவாகிறது என்பது அவர்களுடைய வாதம்.

இந்த கொள்கைக்கு எதிராக வேறு ஒரு கொள்கையுண்டு. மனம் என்பது பல வகையான திறமைகளுடன் பிறப்பிலே இருக்கிறது என்றும் அனுபத்தால் மலர்ச்சியடைகிறது என்றும் அந்த கொள்கையினர் கூறுகின்றனர். ஒவ்வொரு செங்கல்லாக அடுக்கிக் கட்டி ஒரு கட்டடம் உருவாவது போல மனம் உருவாகிறது என்பது ஒரு கொள்கை. ஆலமரத்தின் சிறு விதிக்குள்ளேயே அந்த பெரிய மரம் முழுவதும் மறைந்து இருந்து பின்னர் பிரமாண்டமாக வளர்வது போல மனம் மலர்ச்சியடைகிறது என்பது வேறு ஒரு தரப்பினர் கருதுகிறார்கள்.

ஏதாவது ஒரு உயிரினத்தின் மறிவினைகள் எல்லாம் ஒரே மாதிரியாக அமைந்து இருக்கின்றன என்று கண்டோம். மனித இனத்து மறிவினைகளும் அவ்வாறு தான் இருக்கின்றன. அவ்வாறு இருக்கும்போது ஒரே விதமான சூழ்நிலையில் ஒரே விதமான அனுபவங்களைப் பெரும் குழந்தைகள் வெவ்வேறு விதமாக செயல் புரிவதற்கும், மனப்போக்குக் கொண்டு

இருப்பதற்கும் காரணம் என்ன? வெவ்வேறு வகையான இயல்புகளுடன் மனம் அமைந்தில்லாமல் இருந்தால் வேறு வேறான செயல்கள் நிகழ முடியாது என்பது இந்த கொள்கையின் முடிவாகும். பாரம்பரிய அமைப்பினால் வெவ்வேறான இயல்புகள் காணப்படுகின்றன என்றும் இவற்றிற்கெல்லாம் மூலகாரணமாக முற்பிறவி வினைகள் நிற்கின்றன என்ற தத்துவக் கருத்தும் கூறப்படுகின்றன. பல பிறப்புகள் உண்டு என்ற கொள்கையை ஏற்றுக் கொள்ளாதவர்களும் உண்டு.

இவ்வாறு அடிப்படைக் கருத்துக்களில் மாறுபாடுகள் இருந்தாலும் குழந்தையின் ஐந்து அல்லது ஏழு வயதிற்குள்ளாகவே அதன் பிற்கால வாழ்க்கையின் போக்கிற்கு வேண்டிய பொதுவான மன அமைப்பு ஏற்பட்டுவிடுகிறது என்பதில் அநேகமாகக் கருத்தொருமை காணப்படுகிறது. மனம் எவ்வாறு உருவாகி உள்ளது என்பதை முடிவாக நிச்சயம் செய்து கொள்ளாத நிலைமையிலும் இந்த கருத்தை ஏற்றுக்கொள்வதில் தடையொன்றும் இல்லை. அனுபவங்களின் மூலமும் சூழ்நிலையின் மூலமும் மனம் என்பது சிறிது சிறிதாகச் சேர்ந்து புதிதாக உருவெடுத்தாலும் அல்லது அவற்றின் மூலமாக மனம் மலர்ச்சியடைந்தாலும் விளைவு ஒன்றுதான். ஆதலால் மனத்தோற்றத்தைப் பற்றிய விவாதங்களில் தலையிடாமல் அதன் தன்மைகளை அறிந்துகொள்ள முயலுவது முக்கியமாகும்.

மனம் இருப்பது நமக்குத் தனிப் பெருமை என்று மீண்டும் நான் கூறுகிறேன். மற்ற ஜீவராசிகளுக்கு மனம் உண்டு என்று வைத்துக்கொண்டாலும் அது மனிதனுக்குள்ள மனதைப் போல அத்தனை நுட்பமாக செய்வதில்லை. மனிதனுடைய மனம் அத்தனை நுட்பம் நிறைந்து உள்ளது. பரிணாம ஏணியிலே ஏறி ஏறி நுண்மை பெற்று அது அபி விருத்தி அடைந்து இருக்கிறது என்று கூறலாம். மனிதனுடைய மனம் ஓர் அற்புதம். அதை முற்றிலும் அறிந்துகொள்வது மிகவும் அரிது. அறிந்துகொண்ட அளவிற்கு நல்லது.